ஸ்ரீ:

திருஞானமுத்திரைக்
கோவை எண். 25

கிருஷ்ணபுரம்

# சுவாமி திருவேங்கடமுடையான்
# பிள்ளைத் திருநாமம்




ஷஷ்டி அப்தபூர்த்தி 5-11-'57.

ஞாபகார்த்தமாக



கனிஷ்ட சகோதரர்

**பெரியன் வெ. நா. மணிவண்ணையங்கார்**

பிரசுரித்து வழங்கியது

**7—12—1957.**



ஆழ்வார்திருநகரி

பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்

7—11—57

ஸ்ரீராமஜயம்.

# பதிப்புரை.

## பூமாலைகளை உவந்தணிந்தருளும் எம்பெருமான் பாமாலைகளையும் உவந்தருளுகிறார்.

இதுவரை அடியேன் தேடிக்கண்ட பல தமிழ் பாமாலைகளை எங்கள் குல மூர்த்திகள் உவந்து ஏற்றருளியதுபோல் இன்னும் வெளிவரவேண்டியவைகளையும் அநுக்ரகித்தருள பிரார்த்திக்கிறேன்.

பகவத் பாகவத கிருபைகளால் 5—11—'57-ல் நடந்தேறிய அடியேனுடைய ஷஷ்டி அப்த பூர்த்தியின் ஞாபகார்த்தமாக இதுவரை வெளிவராத புதிய ஒரு நூலை தான் பிரசுரித்து வழங்கவேணுமென எனது கனிஷ்ட சகோதரர் சிரஞ்சிவி **பெரியன். வெ. நா. மணிவண்ணையங்கார்** விரும்பினார். அவ்வாறே இந்நூலும் பதிப்பித்து வெளிவருவதாயிற்று. இந்நூல் எங்கள் குடும்பங்களை வழிவழி ஆட்கொண்டருளுகிற "சுவாமி திருவேங்கடமுடையான்" பிள்ளைத்திருநாமமாகவே அமைந்ததுடன் மட்டும் அல்லாமல் எங்கள் பரமாசாரியனான ஸ்ரீ மணவாள மாமுனிகளின் அஷ்டதிக்கஜ பிரதம பரிகணிதரான ஸ்ரீ வரமங்கைமாமுனி (ஸ்ரீ வானமாமலை இராமாநுஜ ஜீயர் ஸ்வாமி) களின் பொன்னடிகளையே ஆச்ரயித்த ஒருவர்தான் இந்நூலை இயற்றியவர் என்பதும் பெரிதும் சிந்தித்து உவத்தற்குரியது.

இந்நூலை எனது விருப்பத்துக்கு உவந்துசரிபார்த்துத் திருத்தி உதவிய என் பெருமதிப்புக்குரிய ஸ்ரீ T. K. **இராமாநுஜையங்கார் ஸ்வாமியை** என்றும் போற்றித் துதித்துவருகிறேன். இந்த விதமான பதிப்புக்களுக்கு உற்றதுணையாயிருந்து ப்ரூப் பார்த்து சோதித்து உதவும் என் நண்பர் வக்கீல் K. பக்ஷிராஜங்காருக்கு நான் என்றும் கடப்பாடுடையேன். இந்த நல்ல அரிய குலமூர்த்திசுவாமி திருவேங்கடமுடையான் விஷயமான பிள்ளைத்திருநாமத்தை வெளியிட்டு உதவும் என் சகோதரர் சிரஞ்சிவி **பெரியன் வெ. நா. மணிவண்ணையங்கார்** சகல சௌபாக்கியங்களையும் பெற்று எம்பெருமான் பொன்னடிக்கே ஆட்செய்ய வேணுமாய்குலமூர்த்திகளைப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீநிவாஸாய மங்களம்.

திருஞானமுத்திரைப் பிரசுராலயம் — **பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸன்** பதிப்பாசிரியன்.

ஆழ்வார்திருநகரி, 7-11-57.

ஸ்ரீ:

உ

# முன்னுரை.

தமிழிலுள்ள பலவகைப் பிரபந்தங்களுள் பிள்ளைத் தமிழும் ஒன்று. சிறப்புடைய மகவொன்றினை அதன் குழந்தைப் பருவத்துக்கு ஏற்ப வருணித்து குழந்தை விளையாட்டுக்களை தமிழ்ப்பாவினால் புனைந்து பாடுதல் இந்நூலின் பொது இலக்கணம். இப்படிப் பாடும் முறை புறத்திணையில் பாடாண் பகுதியின் பால் படும் என்பர் இலக்கண நூலறிவுடையோர். தொல்காப்பியத்து

**"காமப்பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்"**

**"குழவி மருங்கினும் கிழவதாகும்"** என்னும் புறத்திணையியல் சூத்திரங்களைக்கொண்டு இப்பிரபந்தங்களை அமைத்து முடிப்பர். இப்பிரபந்த வகையின் வளர்ச்சி குறித்து பல்வகையாக ஆராய்ந்து உள்ளனர். அதனை விரிப்பின் பெருகும். ஆனால் முதலில் தெய்வக்குழவியை பாட்டுடைத்தலைவனாகக் கொண்டுதான் இப்பிரபந்தம் தோன்றியது; அதுவும் ஆண் மகவு குறித்தே முதலில் எழுந்தது; பின்னர் பெண் தெய்வக்குழவிக்கும் பாடும் வழக்குத் தோன்றியது என்ற இக்குறிப்புகள் மட்டும் நமக்கு தற்போது போதும்.

"காமப்பகுதி", "குழவியின் மருங்கு" என்ற இரு சூத்திரங்களானும் இப்பிரபந்தம் மகளிர் குழந்தை மாட்டு தன் காதலை தெரிவிப்பது இந்நூல் என்பது பெறப்படும். எனவே தெய்வக்குழவியை அனுபவிக்கும் மகளிரில் ஒரு தாய்தான் முற்றிலும் அக்குழவியின்பத்தை அனுபவிக்க முடியும். அம்முறையில் எழுந்த பாடல்கள்தான் பெரியாழ்வார் பாசுரங்கள். பிள்ளைத்தமிழ் நூல்களுக்கு பெரியாழ்வார்தான் முன்மாதிரி என்று சொன்னால் அது மிகையல்ல. குழந்தையின் இளமை இன்பத்தை ஒரு தாய் நோக்கும் எல்லாக் கோணங்களிலிருந்தும் அவர் பார்த்திருக்கிறார். அம்முறையெல்லாம் பிற்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்களில் நாம் காணவில்லை. இப்போது நாம் காணுவதெல்லாம்

பிள்ளைத்தமிழ் நூல்களுக்கு புலவர்கள் ஒரு வரையறை அமைத்து, துறைவகுத்து, அதனை பத்துப் பருவங்களாக்கிக் கூறுவதுதான் மரபு என்பது மட்டுமே. ஆனால் பெரியாழ்வார் வகுத்த துறையில் பாடக்கூடாது என்பதல்ல. பின்வந்த புலவர்கள் மேற்கூறிய மரபையொட்டியேதான் பாடி வந்திருக்கின்றனர். அவ்வகையில் அம்மரபை ஒட்டி எழுந்ததே இந்நூலுமாகும்.

இந்நூல் திருநெல்வேலிக்குச் சுமார் 6 மைல் தூரத்திலுள்ள கிருஷ்ணாபுரம் என்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள திருமாலைக் குறித்து எழுந்தது. இவ்வூர் இந்நூலில் வேங்கடபுரம் என்றும், கிட்டிணை என்றும் மங்கை என்றும் வழங்கப் பெறுகின்றது. இவ்வூர் அங்குள்ள கோயிலிற்காணும் அழகிய சிற்பங்களுக்குப் பேர்போனது. விஜயநகர நாயக்கர் காலத்திலே சமைக்கப் பெற்ற இச்சிற்பங்கள் அன்றுபோல் இன்றும் புதியவாய் கலை ஆர்வமுற்றோர் யாவர் மனங்களையும் கவர்ந்து நிற்கின்றன. இவ்வூரும் கோயிலும் சமைக்கப்பெற்ற காலம் கி. பி. பதினாறும் நூற்றாண்டென்று தெரிகிறது. நகர் அமைத்தவர் யார் என்பது சிறிது இடர்ப்பாடுடையதாகும்.

சிறிது காலத்துக்குமுன் 'தெய்வச்சிலையார் விறலிவிடு தூது' என்ற ஒரு சிறு பிரபந்தம் வெளியாயிற்று. காலஞ்சென்ற சிரிய தமிழறிஞர் ராவ் சாஹிப் ஸ்ரீ S.வையாபுரியவர்களும் ஆழ்வார்குறிச்சி மேலப்பண்ணை ஸ்ரீ M. P. S. துரைசாமி முதலியாரவர்களும் பரிசோதித்து ‥ வெளியிட்டதாக அந்நூல் முகப்பிலிருந்து அறியக்கிடக்கின்றது. 'அந்நூல் கிருஷ்ணாபுரத்தில் அதிகாரம் செலுத்திய தெய்வச்சிலையார் என்ற தமிழ்ப்புரவலரைப் பாட்டுடைத் தலைவராக வைத்து இயற்றப்பெற்றதாகும். நூலைஇயற்றியவர் குமாரசுவாமி அவதானி, என்று பதிப்பாசிரியர்கள் ஊகித்துள்ளனர். அந்நூல் முகவுரையில் நாம் காண்பது கிருஷ்ணாபுரம் என்னும் நகரும் கோயிலும் நாயக்க அரசனான கிருஷ்ணப்பன் காலத்தே நிருமிக்கப்பெற்றது. சரித்திர மூலமாக

கிஷ்ணப்பன் 1564 முதல் 1572 வரை அரசுபுரிந்தான் இவன் பெயராலேயே நகரம் நிர்மாணிக்கப் பெற்றது. கி. பி. 1565ல் பொறிக்கப்பெற்றதும், கோயிலில் காணப் பெறுவதுமான சிலாசாஸனம் ஒன்று கிருஷ்ணப்ப நாயக் கனே நகரையும் கோயிலையும் சமைத்தான் எனக்காட்டும்.

இதனையடுத்து இவ்வரலாறு முற்றிலும் சரியல்ல என்று அப்பதிப்பாசிரியர்கள் காரணத்துடன் ஆராய்ந்திருக் கிறார்கள். பிஷப் கால்டு வெல் துரை தம் திருநெல்வேலிச் சரிதத்தில் கூறியதை ஆதாரமாகக்காட்டி அதுவே உண்மை யாதல் வேண்டும் என்பதனை அந்நூல் வெளிவந்த மூலமே துலக்க முயன்றிருக்கின்றனர். அந்நூல் வெளிவந்த காலத்தே இப்பிரபந்தம் வெளிவரவில்லை. இதுவும் கிடைத் திருந்தால் இதில் வரும் குறிப்புகளை வைத்து ஆன்ற ஆராய்ச்சித்திறன் பெற்ற ஸ்ரீ வையாபுரிப் பிள்ளையவர்கள் திட்டவட்டமான ஒரு முடிவு காட்டியிருப்பார்கள்.

இந்நூலில் கீழ்க்காணும் குறிப்புகள் கிடைக்கின்றன

"தமிழரியநாயகன் மருகன் மயிலேறிதரு
தம்பிச்சமுகில் வணங்கும்" (கட வாழ்-12)

"அரிய நயினான் குலமருகன்
அழியாத்தொண்டை வளநாடன்
மங்கைப்பாதிப் புளிக்காட்டில்
வழங்குங் கனவி லெறும் பொழுக்கு
வழியைக்குறித்துக் கொடிக்கருடன்
வட்டம் புரியக் கோயில் செய்ய" (தாலப்-1)

"அரியநயினான் மருகன் மயிலேறி கூவத்தின்
அண்ணலுக் கோரொருக்கால்" (சப்பாணி-3)

"தருமத்தின் இளைய நயினான்
தம்பிச்சபூபாலன்" (அம்புலி-10)

"மகாத்திருவநிதி கூவநகர்தரு தம்பிச்சான்
மகிழ்ந்தகுலமதலை செங்கோல்
மயிலேறி மன்னன் பிரதிட்டை செய்வித்தருள
மணிமதிட் கோயில் புக்கான் (சிறுபறை-2)

இக்குறிப்புகளையும், விறலி விடுதூது முன்னுரையையும் பிஷப் கால்டுவெல் குறிப்பையும் சேர்த்து நோக்குங்கால் இக்கோயில் வந்த வரலாற்றை அடியில் கண்டவாறு ஊகிக்கலாம் "தொண்டை நாட்டில் கூவப்பகுதியில் மயிலேறும் பெருமாள் முதலியார் வம்சமென்ற பிரசித்தி பெற்ற வம்சம் இருந்தது. அந்தவழியில் வந்த 'பிச்சான்' என்பவருக்கு மயிலேறும் பெருமாள் என்ற திருமகன் தோன்றினர். அவர் விசுவநாத நாயக்கன் ஆட்சியில் தென்பகுதில் அதிகாரம் செலுத்திய அரியநாயக முதலியாரின் மருமகன் ஆவர். அக்காலத்தே கிருஷ்ணபுர நகரம் நிருமிக்கப்பெற்று விசுவநாத நாயக்கன் குமாரான கிருஷ்ணப்ப நாயக்கர் பெயர் விளங்குமாறு கிருஷ்ணபுரம் என்று பெயரிடப் பெற்றது. அந்நகரிலே ஏராளமான பணம் செலவு செய்து ஒரு விஷ்ணு கோயில் மயிலேறும் பெருமாள் முதலியாரால் நிருமிக்கப்பட்டது. திருவேங்கடநாதன் என்பது பிரதிட்டித்த தெய்வத்தின் திருநாமம். மயிலேறும் பெருமாள் முதலியார் தலைசிறந்த வைணவராய் தெய்வச்சிலையார் என்னும் திருநாமம் பூண்டார். அவரே பின்னுளில் அவ்வூர் அதிகாரியாகவும் திகழ்ந்தார்.

கோயில் எழுந்தவரலாறு:— விசுவநாத நாயக்கன் காலத்தே அமைச்சுத் தொழில் பூண்டு விளங்கியவர் மயிலேறும் பெருமாள் முதலியார் என்பவர். இவர் தொண்டை நாட்டில் கூவம் மயிலேறும் பெருமாள் முதலியார் வமிசத்தே தம்பிச்சான் கிளையிலே திருவேங்கடநாத முதலியார் திருக்குமரர். புகழ் பெற்ற அரியநாயக முதலியாரின் மருகன். விசுவநாதன் காலத்தே கிருஷ்ணபுர நகரம் நிருமிக்கப்பெற்று அந்நகர் அவர் மகன் கிருஷ்ணப்பனையிட்டு கிருஷ்ணபுரம் எனப்பட்டது. மயிலேறும் பெருமாள் முதலியார் வைணவராய் மிகுந்த பக்தியோடு வாழ்ந்த காலத்தே ஒருநாள் கனவில் வேங்கடமலைநாதன் அவர்முன் தோன்றி தனக்கு கிருஷ்ணபுரத்தில் கோயிலெடுக்குமாறு மயிலேறும் பெருமாளுக்கு நியமித்தார், கோயிலெடுக்க

வேண்டிய இடமும் கனவிலேயே அருளப்பட்டது. அதாவது கிருஷ்ணபுரத்தில் புளிக்காட்டில் தோன்றும் ஒரு எறும் பொழுக்கைப் பின்பற்றிச் சென்று எங்கு அதற்கு நேராக கருடன் வட்டமிடுகிறதோ அங்கு கோயில் எடுக்க வேண்டும் என்பது நியமனம். அதன்படி கோயில் அவ்விடத்தே நிருமிக்கப்பட்டது. (தாலப்-1.) கோயில் கட்டி முடிந்து சகாப்தம் 1485க்கு சரியான கொல்லம் ஆண்டு 738-ல் வைகாசி 13-ம் நாள் அமர பக்ஷ திருதியையும், மூல நக்ஷத்திரமும் கூடிய சுபதினத்தில் சிம்மலக்னத்தில் பஞ்சமாயோக ஓரையில் ஸ்வாமி திருவேங்கடநாதர் பிரதிஷ்டை செய்யப் பட்டார். (சிறுபறை—2)

விறலி விடுதூதுமுன்னுரையில் தெய்வச்சிலையார் வேறு மயிலேறும் பெருமாள் வேறு என்றும், மயிலேறும் பெருமாள் வமிசத்தில் வந்தவர் தெய்வச்சிலையார் என்றும் காண்கிறது. அப்போது கிடைத்த குறிப்பின்பேரில் அவ்விதம் அம்முன்னுரைகாரர் அம்முடிவை ஊகித்திருக்கலாம். விறலி விடுதூது முன்னுரையில் கிருஷ்ணபுரங் கோயிலை நிருமித்து கோபுரம் மண்டபம் முதலியவை செய்தவர் மயிலேறும் பெருமாள் முதலியார் என்றும், பின்கைங்கர்யங்கள் தெய்வச்சிலையாரால் செய்யப்பட்டன என்றும் கூறப்பட்டது. மயிலேறும் பெருமாளையும் தெய்வச்சிலையாரையும் வேறாகக் கொண்டது''.

> ''பெருமையாய்க் கீர்த்திமுன்புபெற்ற—முருகுயிர்க்கு
> மன்றலந்தார்கூவ மயிலேறி வம்சமென்னுங்
> குன்றுதனிலிட்ட குலவிளக்கு'' என்ற அடியை

வைத்தும், பின் 'செங்கோன்மைச் தெய்வச்சிலைப் பெருமாள்' எனவரும் அடியை வைத்துமே இருந்தல்வேண்டும். ஆனால் இப்படிக்கொள்ளல் கால்டுவெல் பாதிரி யார் கூற்றோடு முரண்படும். மேற்குறித்த இரண்டு மேற்கோள்களும் மயிலேறியும் தெய்வச்சிலையாரும் ஒருவரே எனவும் பொருள் படலாம். (மயிலேறி என்பது கூவம் மயிலேறும்பெருமாள் முதலியார் என்ற வமிசமுதல்வரைத்தான் குறிக்கவேண்டு மென்பதில்லை) 'முன்பு' எனவரும் வார்த்தை முற்காலத்தே

எனவும் பொருள்படலாம். அது தெய்வச்சிலையார் அப்பெயர் தரிக்குமுன் எனப்பொருள்படலாம் அன்ருே? கூவம் மயிலேறும் பெருமாள் வமிசத்திலுதித்து குலதீபமாய் விளங்கி முன்கோயில் நிருமித்துக் கீர்த்திபெற்றவனும் விறலிவிடுதூது பாடுங்கால் தெய்வச்சிலையார் என்ற பெயரோடு ஆணைசெலுத்தியவருமான பெரியார் என்று பொருள் படலும் ஆமன்ருே. இப்படிப்பொருள்கொள்ளின் கால்டுவல் பாதிரியார் கூற்றுடன் பொருந்துவதுமாகும். கால்டுவெல் துரைமகஞர் கூற்றில் உண்மை யில்லாமலில்லை. இந்நூலில் சிறுபறைப்பருவத்தே 2-ம் பாடலில் வரும் அடிகள் இக் கோயிலெழுந்த காலத்தை ஆண்டு திங்கள் பக்கம் திதி நக்ஷத்திரம் முதலிய விவரங்களுடன் தருகின்றது. அதன்படி கி. பி. 1563-ம் ஆண்டில் மயிலேறி மன்னஞல் கோயில் பிரதிட்டை செய்யப் பெற்றதென்பது பெறப்படும். விறலிவிடுதூதில் கிருஷ்ணப்ப நாயக்கர் பெயர்மட்டும் கூறப் படுகின்றது. ஆனல் இந்நூலில் விசுவநாதன் கிருஷ்ணப்பன் இருவர் காலத்தும் அமைச்சர் தொழில் பார்த்த மயிலேறி என்று காண்கிறது. (தாலப்.1) கிருஷ்ணப்பநாயக்கன் காலம் 1564முதல் 1572வரை என்று சரித்திரம் கூறுகின்றது. எனவே தெய்வச்சிலையார் விறலிவிடுதூது கோயிலெடுத்த 10 வருடங்களுள் பாடப்பட்டிருக்கவேண்டும். தெய்வச்சிலையார் தந்தையின் பெயர் திருவேங்கடநாதன் என்று கூறப் பட்டது. அப்படியாயின் கோயிலெடுத்த மயிலேறி அவருக்கும் முன்னையராதல் வேண்டும். கிட்டின முன்னோராஞல் அவருக்கும் தெய்வச்சிலையாருக்குமுள்ள உறவைக் கூற விட்டிரார் கவி. மற்றையருக்கும் தெய்வச்சிலையாருக்கும் உள்ள உறவெல்லாம் தேடிக்கூறியவர் இதனைச் கூருரா? தவிர 10 வருங்களுக்குள் கோயிலை எடுப்பித்தவரை "கீர்த்தி முன்புபெற்ற முதாதை" என்றுகூறுவரா. எனவே முன்பு என்பது ஒருவர் வாழ்நாளின் முற்பகுதியைக் குறித்தெழுந்ததென்று கொள்ளலே ஏற்புடைத்து. அப்படிக்கொள்ளின் தெய்வச்சிலையாரும் கோயிலெடுத்த மயிலேறும் பெருமாளும் ஒருவரே என்பது போதரும். இது கன்னபரம்பரை வாலாற்ரேடும் பொருந்தும். ஆகவே கிருஷ்ணபுரம்

கோயிற் பணிபுரிந்தவர் கூவம் மயிலேறும் பெருமாள் வமிசத்தில் தம்பிச்சான் (பிச்ச) முதலியார் கிளையில் தோன்றிய மயிலேறும் பெருமாள் முதலியார் என்றும் அவர் விசுவநாதன் காலத்தே கோயிலமைத்து அவ்வூரில் அதிகாரம் செலுத்தியவர் என்றும் அவர் வைணவராய்த் தெய்வச்சிலையார் என்ற பெயர் பூண்டு விளங்கினார் என்றும் நாம் ஊகிப்பதில் தவறில்லை என்றேபடுகிறது.

இந்நூல் எழுந்த காலம் 1563 ஆதல் வேண்டும். கோயில் பிரதிட்டைகாலம் 1563 ஆதலாலும் கட்டிய பின்பே நூல் எழுந்திருக்க வேண்டுமாதலாலும், நூலில் கிருஷ்ணப்பன் பெயர் விசுவநாதன் பெயர் இரணடும் குறிக்கப்பட்டிருத்தலானும் 1564ல் கிருஷ்ணப்பன் அரசெய்தியதாலும் விசுவநாதனின் அரசு முடிந்து கிருஷ்ணப்பன் ஆட்சி தொடங்கிய காலத்தே இந்நூல் பிறந்திருக்க வேண்டும் என்பது ஒருதலை.

இதனைப் பாடியவர் பெயர் கிடைக்கவில்லை. நூலில் வெளிப்படையாக இயற்றியவர் பெயர் குறிக்கப்படவில்லை. ஆனால் பாடியவர் ஒரு பரம வைணவர் என்பது தெளிவு. "மணவாள மாமுனி மலர்ப்பதந் தொழுதல் செய்வாம்" (கட வாழ் 12) என வருதலால் அவர் தென்னாசாரிய சம்பிரதாயத்தவர் என்பது பெறப்படும். மேலும்

மஞ்சுதவழ் வரமங்கை விஞ்சையெம் பெருமானை

வரமுனியை வாழ்த்தல் செய்வாம். (கட-வாழ்-13)

எனவருதலால் அவர் நான்குனேரி என்ற வானமாமலையில் உள்ள மடத்து ஸ்வாமி பாம்பரையில் 6வது பட்டம் பெற்று விளங்கிய விஞ்சிமூர் எம்பெருமானார் ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தி என்பதும், தெரியக்கிடக்கின்றது. நூலில் வரும் சம்பிரதாய பதங்களால் இவர் வைணவ சம்பிரதாயத்தில் நன்கு ஊறியவர் என்பதும், பிரபந்த வாக்குக்களின் சாயைகள் பலவிடங்களில் பிரதிபலிப்பதிலிருந்து அவ்வாக்குக்கள் அப்படியே கொள்ளப்பட்டிருப்பதிலிருந்தும் இந்நூலாசிரியர் திவ்யப் பிரபந்தங்களில் நல்ல பயிற்சியுடையவர் என்பது நன்கு தெளியலாகும்.

இந்நூலின் நடையிலிருந்து இயற்றியவர் ஆன்ற தமிழறிவுடையார் என்பது விளங்கும். பாட்டின் ஒழுக்கு ஆற்றொழுக்காகச் செல்கிறதெனினும் அது சமதரையில் ஓடும் ஆறல்ல. ஓசையும் குதியும் துள்ளலும் தெளிவும் கொண்டு மலையில் குறுகுறுவென்று பாயும் காட்டாற்றின் கம்பீரத்தை நாம் நூலில் காண்கிறோம். நூல் நடையையும் கன்னபரம்பரைக் கதையையும், நூலில் பாடினோர் பெயர் காணப்பெறுமையையும் கொண்டு பார்க்குங்கால் கோயிலெடுத்த மயிலேறும் பெருமாள் தன் வைணவ பத்திப் பெருக்கால் தன்கோயிலில் பிரதிட்டை செய்யப் பட்ட திருவேங்கடநாதனுக்குத் தன் திரவிய, காய கைங்கர்யத்தோடு மனம் வாக்கு இவற்றின் கைங்கர்யமாக இந்நூலை இயற்றி அவன் திருவடிகளில் சமர்ப்பித்ததாக இருக்கலாமோ என்ற ஐயுறவு ஏற்படுகின்றது. ஆனால் அது தேர்ந்த அறிஞர்கள் முடிவு செய்ய வேண்டியதொன்றாம்.

இந்நூலின் பழையபிரதியொன்று இருந்ததை ஸ்ரீ **T.K. ராமாநுஜய்யங்கார்** அவர்கள் சோதித்து வழங்கினார்கள் நூல்களில் சிலபாகம் கிடைக்கவில்லை. சிலவிடங்களில் அடிகள் பிறழ்ந்திருப்பன போல் காண்கிறது. சிலவிடங்களில் சொற்களின் வடிவம் துலங்கவில்லை. வேறுபிரதி காணாமையில் அவற்றை ஒப்பு நோக்கி நேர் செய்யவழியில்லை நம் ஊகத்தை வைத்து மாற்றுவதும் முறையல்ல. எனினும் சிலவிடங்களில் நிச்சயமாகத் தவறு என்று தெரிந்தவிடத்தே சிலமாறுதல் செய்தும் இருக்கிறது. தமிழ் அறிஞர்கள் யாரேனும் இந்நூலின் பிரதி கிடைத்து அனுப்பினால் மறுபதிப்பிலாவது நூல்முழுவடிவுடன் வர உதவியாகும். நூலைப்படிக்கும் தமிழறிஞர்கள் தங்களுக்குத் தோன்றும் ஊக பாடங்கள் தந்தால் அதுவும் உதவியாகும். இந்நூல் இப்போது வெளிவந்த வரலாறு பதிப்புரையில் கூறப்பட்டிருக்கிறது. ஸ்ரீ பெரியன் **வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்காரது** தமிழ்ப்பணி நாடெலாமறிந்ததொன்று. அவர்களது அறுபதாம் ஆண்டு விழாவையொட்டி அத்தமிழ்ப்பணியொழுங்கிலே ஒரு புது நூல் வெளிட

வேண்டும் என்று அவர் சகோதரர்களும் நண்பர்களும் விரும்பியதன் பேரில் அவர்களிடம் உள்ள புது நூல்களில் அச்சேற்றத்தக்க முறையில் இந்நூல் இருந்தது. "அதுவும் அவன் இன்னருளே". பெரியன் குலதெய்வம் திருவேங்கடமுடையான். குருகையில் பெரியன் குடும்பத்தார் ஒரு திருவேங்கடமுடையான் ஸன்னதியை நிர்வகித்து வருகின்றனர். குலதெய்வத்தின் பெயரிலேயே நூலமைந்தது. நூலியற்றியவர் பெரியன் வமிசத்தவரைப் போல் வானமாமலை மடத்து ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்தவர். எனவே பகவதனுக்ரகமும் ஆசார்யாநுக்ரகமும் பரிபூர்ணமாக உடைய நிலையில் இந்நூல் இப்போது வெளிவருகின்றது. இதுபோன்று இன்னும் பல வெளிவாராத நூல்கள் அவர்கள் பால் உள்ளன. அவற்றையும் தமிழுலகு படித்துப் பயனெய்துமாறு அன்னார் உதவ அவர்கட்கு நீடிய ஆயுளும், செல்வமும், ஆரோக்கியமும் அலர் மேல் மங்கை யுறை மார்பன் அருளுவாராக. குறுகிய காலத்தே அச்சேற்ற வேண்டி நேரிட்டதால் விரைவில் தொழில்பட வேண்டியதாயிற்று. அதன் காரணமாக ஏதேனும் அச்சுப்பிழைகள் ஏற்பட்டிருப்பின் அவற்றை ஆன்றோர் பொருட்படுத்தாது மன்னிக்க வேண்டுகிறேன்.

இப்பணியில் என்னை ஈடுபடுத்திய பதிப்பாசிரியர்க்கு என் நன்றியும் வணக்கமும்.

**கி. பக்ஷிராஜன்.**

# விஷய அட்டவணை.

ஸ்ரீ:

கிட்ணபுரம்

சுவாமி திருவேங்கடமுடையான்

# பிள்ளைத் திருநாமம்

## கடவுள் வாழ்த்து.

நீர்பூத்த..........................................................
..........................................................
..........................................................
நின்றொருத் தாளிலேந்துஞ்

சீர்பூத்த........ தகடுபடு கோமளச்
சீதளத் தவள மடல்வாய்
தேன்பூத்த தாமரைக் குந்தனஅறு நூலறிவு
தெளிவித்த கலைவாணியும்

பார்பூத்த தெள்ளருவி யிடையருக் குடமுழவு
பகலிராக் கடவுள் முரசும்
பம்புபக டுற்றபொதி யக்கும்ப முனிசெழும்
பவளவாய்க் குடியிருக்கும்

வார்பூத்த தெண்டிரைத் தமிழ்மண் டலம்பரவு
மங்கைவேங் கடநெடிய மால்
வள்ளல்பிள் ளைத்தமி ழுரைக்கின்ற பிள்ளைமையென்
வாக்கினுங் குடிவாழ்ந்ததே. (1)

ஐயன் திருக்கோவ லாயனு ரிடைகழியில்
அறியாத் திருக்கோய்வதாய்
அமுதத்தை வடிகொண் டெடுத்துக் குழைத்த சுவை
அளாவிய முதற்பாவினுல்

வையந் தனித்தகழி யென்றெடுத் தோதுமுறை
வனசத் தடம்பொய் கையின்
மருவுமொரு பொய்கைபூ தம்பேயர் மழிசைநகர்
மன்னனடி யிணைசென்னிமேற்
கையந்த மினிநெடுந் தஞ்சலித் தேவினைக்
கடல்வற்று மறை பணிகுதும்
கமுகங் கழுத்திற் பசும்பாளை கிழியக்
கருங்குவளை யந்தடத்தின்
மையங் குளித்தகளி யானைத் துதிக்கையின்
வரால்குதிக் கின்ற பொழில் சூழ்
மங்கையலர் மேன்மங்கை மணவாளனைக் கருதி
வாழ்த்துமென் கவிதழையவே. (2)
பொய்க்கின்ற ஞானமும் பொல்லா வொழுக்கமும்
புனிதமில் அழுக்குடம்பும்
பூதலத் தினினின்ற நீர்மையா முறுவது
புலப்பட்ட தன்றென்னவும்
[1]எக்கின்ற யோனியிடை நீபிறந்தாய் விண்ணில்
இமையவர் பெருந் தலைவனே
இசைக்கின்ற விண்ணப்ப மெய்யாக நின்றுகேள்
என்றுவகு ளாபரணனைப்
பைக்கின்ற தன்னபல சுடிகைமுழு மணிமகுட
பந்தியிற் பணைபரப்பும்
பழமறைச் சேடா வதாரப் புளிக்கீழ்
பராங்குசனை யடிபரவுதும்
மைக்கின்ற முழுநீல மாணிக்க மலைபோல
மலைகுனிய நின்ற பெருமான்
மங்கையலர் மேன்மங்கை மணவாளர் பதமலர்
வழுத்துமென் கவிதழையவே. (3)
குடியாய்ப் பரஞ்சுடர்க் கடிமையாந் தொண்டர்பணி
..........................................................
..........................................................
குல சேகரச் சேரனைப்

(பிரதி) 1. மெய்க்கின்ற வொளியினிடை.

படியாய்க் கிடந்துனது பவளவாய் காண்பனிது
பரமென்ற பரனை................
..........................................................
பாததூளியை யொருவர்கள்
முடியாத் தடந்திருக் காவிரி யரங்கத்து
முதல்வன் பதாம்புயத்து
முழுவது மொடுங்கிய ..............
முழுதுற வழுத்துவனியான்
வடியாப் பெரும்பவக் கடல்வடிய எனதடிமை
வரையாத வரைகமழ்துழாய்
மங்கைநகர் வேங்கடவர் செங்கமல மோங்கிய
மலர்ச்சரண் வழுத்துதற்கே. (4)

கருமுகத் துறைசிதறு பருவமழை முகிலிடறு
கமுகிளம் பாளைக் கொழுங்
காவிரி பொதியவி ழுங்தொறும் பரிமளங்
கமழுந் திருக்காவிரித்
திருமுகத் துறைமதி ளரங்கத்து நள்ளிச்
செழுமணிச் சூடிகை மகுடம்
திகழ்திரு வநந்தசய னத்தரங் கேசர்பூஞ்
சேவடித் தாமரைக்கே.

ஒருமுகத் துறைமுத் தமிழ்த்தொடை பதந்தொறும்
ஒழுக்குமது ரச்சுவைபழுத்
துயர்குறுந் தாண்டக நெடுந்தாண் டகங்கட்
டுரைத்தகலி யனையேத்துதும்
மருமுகத் துறையளிப் படலைதுளி நறவுண்டு
வண்டுழாய்க் கண்படுக்கும்
மணிவரைத் திண்புயத் தெங்களலர் மேல்மங்கை
மார்பனை வழுத்துதற்கே. (5)

ஒருகோ லெடுத்துத் தடுத்தமா யாவாதம்
ஒழுகுமத வேழக்குழாம்
ஊர்த்துவபுண் டரமிட்ட மத்தகம் பிளவெழ
உடைக்குமிடி யேறுபொருவச்

செருக்கோ டுரைக்குழுப நிடதவே தாந்தம்
தெளித்தசீ பாடிய மறைச்
சீபெரும் பூதூ ரிராமா நுசக்கடவுள்
திருவடித் துணைவாழ்த்துதும்
தருக்கோடு பூத்துச் சொரிந்தசெண் பகமடற்
றளைமுறுக் குடைய மிடையும்
[1] தண்ணறும் பூந்தட மும்புடை யலம்பு
தலைப்புனித நீர்ப்பரிமள
மருக்கோடு தாழ்ந்ததே மாந்தழை குழைத்திரு
மருங்குந்தமிழ்ப் பொருநைவாய்
மங்கைவேங் கடவரைக் கங்கைதூங்கியபத
மலர்ச்சுவடு துதிசெய்யவே. (6)
தாளூர் சதங்கையும் பொன்னஞ் சிலம்பொலி
தழங்கையும் கனகவயிரத்
தண்டையு மணிந்துதிரை மண்டலத் தூருமொரு
தண்டுழாய்க் கொண்டலிவராய்த்
தோளூர் திருச்சங்கு திருவாழி யுந்தனது
தோளூர வெழுதி முழுதும்
துய்யதொரு திருவழுதி கிழவர்திரு முடியடைவு
தோன்றிய தனிக் காரியார்
நாளூர் தவம்புரிக் துயர்குருங் கைப்பதியின்
நம்பியரு ளக்குருகைமா
நகர்நம்பி யைக்கண்ணி நுண்சிறுத் தாம்புமொழி
நாவாணர் தேவு கோளூர்
வாளூர் கருங்கண்மட மங்கையர் மயக்கற்ற
மதுரகவி யைப்பரவுதும்
மங்கையலர் மேன்மங்கை கோனைக் கிட்னபுர
மாலைத் துதிப்பதற்கே. (7)
வேதமுனி பரசமய வாதமுனி வேதாந்த
............................................................
............................................................
............................................................

(பிரதி) 1. தண்ணங் தடமும் புடையலம்பு

போதமுனி...... .......................................
............................................................
............................................................
புவிமலர மலர்வித்த தோர்
நாதமுனி நாதகிதத்தளவை கண்டமுனி
நாமம் துதித்தல் செய்வாம்
நாளிகே ரத்தலைக் குலைதாழ்ந்து பொழிஞாடு
.........................................வே
......முனி வயிரக் கணைக்கால் முனிந்திள
வரால்பாய் தமிழ்ப் பொருநைசூழ்
மங்கைவள மோங்கவரு மெங்கள்வேங் கடவரை
வழுத்துமென் கவிதழையவே. (8)

பொன்னித் தரங்கக் கரத்தாள மும்பசும்
பொன்னுங் கொழித்திரைக்கும்
பூந்துறைத் தமிழுறந் தைப்பதிச் சோளேந்த்ர
பூபதி யவைக்க ளத்திற்
பன்னித் தகுஞ்சிவாற் பரமென் றெழுத்திடப்
பக்கத் தழைப்ப வதன்மேற்
பதக்குமுள வென்னுங் திருக்கூர வேதியன்
பாதாம்புயம் துதிப்பாம்
கன்னிக் குறுங்கருங் கமுகிளம் பாளைக்
கடைத்தலை முறுக்குடைத்துக்
கண்ணறவு துண்ணென்று துளிதூங்கு சாமரைக்
கற்றைவெண் ணிலவரும்ப
மன்னித் தடம்புளின வண்டலி னிலாமுக்கி
மதிமண்டலத் தமுதெனு
மப்வங்குபொழின் மங்கையில் வயங்குவேங் கடவரை
வழுத்துமென் கவிதழையவே. (9)

அலையெறிந் தொருபுடை கிடக்குங் கருங்கடலை
அழகழிக்குங் கரியமால்
அத்திகிரி நின்றபே ரருளாளர் பொன்னடிக்
கடிமைபூண் டாட்பட்டு முலை

சிலையெறிந் திருகடை குழைத்து மிதிலைப்பதித்
திருமகளை வேட்டபெருமாள்
திருவால வட்டந் தரித்தனு தினந்தொறுஞ்
சேவித்த கச்சிநம்பி
மலையெறிந் திருகடைக் கண்கறுத் திளகிமணி
வடமறுத் தோங்கி வீங்கி
வற்புறுத் துங்கொங்கை மங்கையர் விழிக்காம
வலையறுத் துயரு நம்பி
நிலையறிந் திருநிரண சரணபங் கேருக
நினைத்துந் துதித்தல் [1]செய்வாம்
நீங்காத புகழ்மிகு மங்கைவேங் கடவரை
நிகழ்த்துமென் கவிதழையவே. (10)
தெண்ணறவு கொப்புளிக்கும் புனற் றண்ணந்
திருத்துழாய் மாலைபூண்ட
திருமாலை யாண்டான் திருக்கோட்டிநம்பிதென்
திருவாரங்கத்துளரையர்
பண்ணற வுரைக்குமுப நிடதவேதாந்தம்
படித்தொழுகு பெரிய நம்பி
படிபுரக் கின்றதிரு மலைநம்பி ஞானம்
பயின்றவெழு பத்து நால்வர்
தண்ணறவு துளிவிடுத் தொழுகுபங் கேருகத்
தாளிணை வழுத்தல் செய்வாம்
தண்பொருநை யடைகரைத் தேமாம் பழக்குலைத்
தலைசிதற வாளை குதிபாய்
வண்ணமது வொழுகுகுள மடைதிறந் தொழுகுபுன
வனமாலை மங்கையெங்கோன்
வண்டமிழ்க் கோதைமண வாளர்வேங் கடவரை
வழுத்துமென் கவிதழையவே. (11)
பணவாள ராவணைப் பள்ளிகொள்ளும் பசும்
பச்சைப் புனத்தண்டுழாய்ப்
பரிமளத் தொடையணி தடம்புயத் திருமார்பர்
பவளவாய்த் தென்னரங்கர்

---

(பிரதி) 1. செய்வார்

மணவாழ்வு நாளுநா ளுந்தழைத் தோங்குமுறை
மங்கலா சாதனஞ்செய்
வயிணவர் பிரான்கோயில் மணவாள மாமுனி
மலர்ப்பதந் தொழுதல் செய்வாம்
தணவாத திகிரியுஞ் சங்கமுஞ் செங்கைத்
தரித்தமங்கைப் பிரானைத்
தமிழரியநாயகன் மருகன் மயிலேறிதரு
தம்பிசசமுகில் வணங்கும்
குணவாரிதிக் கொண்டலைக் கிட்ண புரமணிக்
குண்டலக் கொம்பழகனைக்
கொங்குவிரி பங்கயத் திருமங்கை கொண்கனைக்
கூறுமென் கவிதழையவே. (12)

பரசமய வடவா முகத்தைத் துகைத்திரு
பதத்துக ளெனப்படுத்திப்
பாடண்ட மதமலை முழங்குமொரு கோட்பதை
பதைப்பநா வுள்ளடக்கி
வரசமய நாராய ணன்சமய மேபுவன
மண்டலத் திடைநிறுத்தும்
மஞ்சுதவழ் வரமங்கை விஞ்சையெம் பெருமானை
வரமுனியை வாழ்த்தல் செய்வாம்,
பரசுதரன் மதியிதழி நதியொழுகு செஞ்சடைப்
பவளமேனித் தவளமெய்ப்
பானிலா வெண்ணீறு மேனிலா விமமங்கை
பங்கனங் கைப் பலிதவிர்த்
துரைசெய்தருள் தற்பரனை மற்புயத் தெழுமல்லர்
உடையமுடு கிப்படருமால்
உம்பர்தொழு மெம்பிரான் மங்கை வேங்கடமாலை
யோதுமென் கவி தழையவே. (13)

கடவுள் வாழ்த்து முற்றும்.

## க. காப்புப்பருவம்

### திருமால்

நீர்தந்த திருவுந்தித் தடத்துமுளைத் தருவி
  நிலைத்திலைத்த முள்ளரைப்பூந் தகட்டகட்டுப்பொகுட்டுத்
தார்தந்த கொழுங்கமலத் தலைப்புறத்தில் அயனைத்
  தந்துவட விலைத்துயிலுந் (தனிக்)கடவுள் புரக்க
வார்தந்த புளகமெழுங் களபமுலைக் குரும்பை
  மங்கையலர் மேல்மங்கை மணம்புணர்கிட்ண
வேர்தந்த கடவுள்முறை முறையிடுந்தா மரைத்தாள்
  வேய்க்.......... திரு வேங்கடநா தனையே. (1)

### திருமகள்

சுழிமுகத் தெறியுந் திரைக்கர முழக்கருத்
  துளிமுகத் தொழுகு முந்தந்
துறைதுறை முகக்குஞ் செழுந்திரைப் பாற்கடற்
  ....றுண்ணெ...
எழின்முகத் தெறியுங் குறுந்திவலை சிதறமட
  விணருழ்த்த துளப நெடுமால்
இனியதெள் ளமுதங் கடைந்தபொழு துடனுதித
  தெழு மிளங் கிளிபுரக்க
கழிமுகத் தெறிபொங் கரும்புன்னை யம்பொழிற்
  கானந் துழாவு மறுதாட்
கானந் தழீஇக்கொண்ட குழலிசைய மழலையங்
  களிவண்டு கண்ப டுத்த
வழிமுகத் தெறியுமக ரந்தமள வுங்குவளை
  வண்ணனை மலர்க்கண்ணனை
மட்டொழுகு தண்டலைக் கிட்ணபுர நகர்தழைய
  வந்தவேங்கட முகிலையே (2)

### சிவபிரான்

பிறை[illegible]நம்பியசெழுஞ் செக்கர்வானத்தலை
  பிறங்குசெம் பவளக்கொடிப்
பின்னிய சடைக்கற்றை முற்றுந் தழைக்கும்
  பெருங்காடு தழையப்பதத்

துறையரும் பியபழந் கங்கைவெள் ளம்பரந்
தொழியாது தெள்ளருவிபோல்
ஒழுகுதோறும்புனித முழுகுமாகத்தந்
துளங்களித் தாடிகாக்க

குறையரும் பியபனி மதிக்குழவி யிருகவடு
கொழுகிக் கிழித்த கமுகந்
குளிர்பாளை வாளராப் படமெடுத் தனையபூங்
குவிமுகை நெகிழ்ந்த பொருநைத்

துறையரும் பியகவரி வெள்ளைவெண் குருகெனச்
சுழியிடைக் கயலொளிக்கும்
துங்கமங் கைப்பதியில் எங்கள் வேங்கடவரைத்
துயல்வரு துழாய்ப்புயலையே. (3)

## உமாதேவி

மலைபழகு மலையரைய னிமயப் பசுங்கிள்ளை
மதுரம் பழுத்தொ ழுகுதேன்
வழியுங் கொழுங்குமுத முத்தநகை வள்ளத்து
மழலையந் தீங்குழல் மொழிக்

கலைபழகு கலைகற்ற பூமணக் கோமளக்
காம காவிய முழுவதும்
கட்கடை யுருக்கொண்டு கறைபட்டகண்டன்மங்
கலகலக் கிள்ளை காக்க.

கொலைபழகு திகிரித் தடங்கைக் குடங்கையிற்
குடவளை யெடுத்த பானைக்
குழலிசை யளிப்படலை மடல்குடைக் தூதகறை
கொப்புளிக்குந் தண்டுழாய்த்

தலைபழகு திகழிகைத் தலைவனைப் பொதியத்
தமிழ்த்தென்றல் மன்றலுலவுந்
தடமதிற் கிட்ணபுர வடமலைப் புயலையெழு
தாமறைக் கடல் வடிவையே. (4)

## பிரமன்

அண்டபகி ரண்டத்து வெளிமுகடு தட்டுருவி
யசையாது நின்ற வடவெற்
பாயிரங் குவடிடிய மாயிருங் குடகாற்
றறைந்தலைக் கின்ற ஞான்று
மண்டல மிடுங்கடு விடத்துளை யெயிற்றுமணி
மகுடமுற் றிய சூட்டுநீள்
வாளராப் பணபந்தி யுலகம் படைக்கின்ற
வனசமல ரயனளிக்கத்
தண்டலையில் மழைதூங்கு கொண்டலிடி முழவந்
தலைப்பட் டலைப்ப கெட்டைத்
தாழை...க்குலைத் தலைசிதறி யிடையமுத்
தலைவாழை யூடொடிப்பக்
கண்டல்முட முதிர்பனையில் வண்டறைய மடல்விண்டு
கான்றுபூஞ் சுண்ணம் ஒழுகக்
கமழுமங் கைப்பதியில் எங்கள்வேங் கடவனைக்
கண்ணித் துழாய்ப் பரனையே. (5)

## ஆதிசேடன்

தீப்பட விழிக்கின்ற செங்கட் கருங்குலைச்
சிறுகுறுந் துளையெயிற்று
திவலைபடு மாலக் கலுழிப் பழமறைத்
தெள்ளமு தொழுக்கிறைக்கும்
பாப்பணை வளைத்துமண் டலமிட்ட கவைநாப்
படக்கவிகை முன்கவித்துப்
பசியமர கதமல்கு மணியெனக் கங்குலும்
பகலுமிமை யாதளிக்க
பூப்படர் தண்ணறுஞ் சினைகுழைத் திளகியம்
பூந்தென்றல் மன்ற லளவிப்
புதுமட லுடைந்த கடை வாய்மடுத் தலைதொறும்
புலராது நறையூற் றெழக்

காப்படு கிரீடைபாய்க் துவட்டெறிய வயலிற்
கரும்பிளங் கண்படுக்கும்
கட்டழகு தருதமிழ்க் கிட்ணவேங் கடவரைக்
காப்பியத் தமிழரசையே. (6)

## பெரியதிருவடி

வழியுஞ் செழுஞ்சுவை யுவட்டெழுங் கனகவட
வரையிற் குறுஞ்சி யக்தேன்
வைத்தமலை முழையிடைப் புழைத்தடங் கைத்தலை
மடுத்தெடுத் தள்ளி யள்ளிப்

பிழியுங் கொடுஞ்சினத் தயிரா பதத்திற்
பிறங்காது புக்கொளித்த
பெருமதம் பெருகுகார்க் கோடகலை யணிகின்ற
பெரியதிரு வடிபுரக்க.

மொழியும் தமிழ்ப்பொதிய மணிமாலை வெள்ளருவி
மொத்துண் டிரண்டு புடைபாய்
முல்லைக் கொழுங்கொடி யொழுங்குறப் பூத்தமடல்
முருகொழுகு மலர்விரிப்பக்

கழியுங் கொழுங்கொடி யிடைத்தரள மணிமே
கலைத்தலை விரித்த தேய்க்கும்
கங்கையக் தண்பொருநை மங்கைவேங் கடவரைக்
கடலுல களந்தாரையே. (7)

## சிறியதிருவடி.

மாலாழி வெள்ளப் பரப்பைப் புரக்குமொரு
மழைவள்ளல் திருவுள்ளநீர்
மைக்தே யளிப்பக் கலக்கமற் றலையெறியும்
மகர வாரிதிகடக்தப்

பாலாமி லங்கைப் புறத்திலே பெருமாட்டி
பயிலுக் துயிற்சுவையைகன்
பகலுமிர வுக்துறக் தவள்தந்த சூடைமணி
பாலித்த கவிபுரக்கக்

கோலாள ரெங்குழக் கன்றுமா னிரையும்
கொடிப்புலியு மடமானுமூர்
கோளரவு மடமயிலு மொருதுறைத் தண்புனல்
குடிப்பவேய்ங் குழலிசைத்தேன்
காலாழி யிற்கருணை மடைதிறக் குங்கடைக்
கண்ண...........................
...............கிரணசரணபங்கேருகக்
கலவிமங்கைப் பரனையே. (8)

## சேனை முதலியார்

சிரம்படியு மூப்பத்து முக்கோடி தேவாதி
தேவர் மகு டாடவியினும்
சிவன்யன் புனையுமணி மவுலியினு மலர்பூஞ்
செழுங்கைத் துணைத்தாமரைப்
பிரம்படி படக்கடா வியசேனை காவலன்
பிள்ளைவரி வண்டு துள்ளப்
பிணியவிழ் பசுந்துழா யணியல்மண மொழுகுமெம்
பெருமான் மகிழ்ந்து காக்க
வரம்படி படக் கொடித் தேர்க்குலம் பொடிபட
வயப்பூட்கை தாழ்ந்த திணிகை
வற்று விலாழிநீர் முற்றுமொரு துளியா
வறந்துத மடையடைப்பக்
காம்படியு மங்குசந் துகள்படப் பாகர்தலை
கடையறக் கடலிலங்கைக்
கள்வனுள் ளுயிரறக் கணைகோத்த கிட்டிணையிற்
கரியமாணிக்கத்தையே. (9)

## வகுப்பு. திருவாழி

தொண்டர் திரண்டெழு புயகீள் குன்று
சோதிசெய் காந்தியி லேதழைத் தேற்பவர்
தும்பி யலம்பிய நறைபாய் மன்றல்
தோய்தொடை பாங்கணி யாரமர்க்கூற்றினர்

தொண்டையர் மன்பெற வடபால் வந்து
தூளெழு வாம்பரி பார்படப் பார்த்தவர்
துந்துமி யந்தர முழவார் பம்பை
சோனக ரேங்க வுலாவரக் கூர்ந்தவர்
எண்டிசை வெண்டிரை யெறிநீர் சிந்தி
யேழுல கோங்குழு னீரறத் தீப்பவர்
எந்தையர் செந்தழல் வடிவாய் நின்றும்
ஏழுறு பூங்கை விடாமற் பூந்தவர்
எஞ்சலில் வஞ்சனை நெறிகூர் கஞ்சன்
ஆருயி ருண்கவர் கூர்முனைக் கோட்டினர்
என்புறு மைம்புலன் அறைபோய் உம்பல்
ஈடழி வான்றுணை காவெனக் காத்தவர்
அண்டர்கள் வெண்டயிர் கொதிபா லுண்டும்
ஆனிரை தாங்கு பயோததிச் சேர்ப்பனை
அந்தி புகுந்திருள் பகலே மண்ட
ஆழியில் வான்கதி ராழியைத் தாக்கனை
அம்பர மம்பரம் அழல்வாய் மண்டி
ஆரழல் தோய்க்கிடு வார்சிலைத் தீர்த்தனை
அம்புலி தண்புனல் மடலவிழ் கொன்றை
அராபுனை பூஞ்சடை யோனிரப் பார்த்தனை
வண்டு குடைந்துழு தறுகால் கிண்டி
வாய்கறை மாந்து துழாய்மலர்த் தோட்டனை
வண்டமிழ் கொண்டிய லிசைவே தஞ்செய்
மாதவர் தாம்புனை காவியப் பாட்டனை
வந்தனை யஞ்சலி வழிபா டொன்று
மாமலர் சூழ்ந்து தழீஇயபொற் சேட்டனை
மங்கை வளம்பதி யலர்மேல் மங்கை
மார்பனை வேங்கட வாணனைக் காக்கவே (10)

## திருச்சங்கு

மறைவலம் புரி கிரண சரணபங் கேருக
மணக்கும் புனத்தண்டு ழாய்
மாதவன் பவளவாய் நாதகீ தத்திசை
வலம்புரிவ தன்றி யொன்றும்

பொறைவலம் புரிதிரை யலம்புமக ரக்கடற்
புடையகழி யிடைவளைக்கும்
பொன்மதி ளரக்கர்தங் கோனகன் மலங்கவொலி
பொரு வலம்புரி புரக்க
துறைவலம் புரிவளைக்குஞ்சலஞ் சலமீன்று
துண்ணென் றுயிர்த்த முத்தஞ்
சுதையமுத கலைமதி யுதிக்குங் குழாங்கோடி
தொகையுதித் தொளி மழுங்கிக்
கறைவலம் புரியும் வலம்பெறத் தொகையற்ற
கதிரெறிக் கும்பொருநையிற்
கங்குலை விழுங்கவரு மங்கைநக ரெங்கள்வேங்
கடமாலை மால்வடிவையே: (11)

காப்பு முற்றும்

## 2. செங்கீரைப்பருவம்

முறுக்காணி யிற்கொழுங் குரலிறுக் கியதிவவு
முறுகியிறு காதமைத்து
முழுவயிர மட்டிட்ட மணிமகர யாழிடை
முகந்தமுளை வள்ளுகிறெறிந்
துறுக்காது பதமதுர மொழுகத் தெளிக்குமிசை
யொருவழி யுடற்று நசைகண்
டுருகாக் கருங்கல்லு முருகத் தொகுக்குமிசை
யுலகத்து வட்டறுத்து
மறுக்கா மனத்தமுது மெதிரெடுப்பக் குமுத
வள்ளத் துறைப்ப வளவாய்
மதுரம் பழுக்குங் கனுக்கருப் பம்பாகு
மட்டித்த தீங்குழற்பண்
சிறுக்காது தித்திப்ப மைக்குவளை வண்ணனே
செங்கீரை யாடியருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கடமணிக்குழக
செங்கீரை யாடியருளே, (க)

கோங்கரும் பைக்குழைக் கின்றபச் சிளநீர்க்
குரும்பைச் சுவட்டரும்புங்
குவிமுலைக் கொடியிடைப் பிடிநடைப் பவளவாய்க்
கோவைபடு தவளமுல்லைப்
பாங்கரும் பைக்குழைக் கின்றகுரு முத்தம்
பழுத்தமுறு வற்றிருமுகப்
பங்கேரு கத்தலர் மேன்மங்கை பிரியாத
பருதிமுழு மணிமார்பனே
பூங்கரும் பைக்குழைக் கின்றதெள் ளமுதம்
புகட்டிக் குழைந்த வட்டை
புறமிட்டு வட்டருந் துறைமுத் தமிழ்ச்செழும்
புதுவைப் புனத்தண் டுழாய்த்
தீங்கரும் பைக்குழைக் கின்றவடி வழகனே
செங்கீரை யாடியருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடி யருளே. (2)

ஈரொழுங் குங்குயிற் றியகுரு மணித்தரள
மிடையிடை யினுங் குயிற்றி
இலகுமொழு கொளிநீல மணியரசு நள்ளிடை
யிழைத்துக் குழைந்த பொற்பூண்
தாரொழுங் குத்தகடு பட்டகுட மல்லிகைத்
தலைச்சுற்றி விரிசிறைநறைத்
தமரவரி வண்டடை கிடப்புது பொருவுநற்
றரளமரு மத்திலங்க
வாரொழுங் குற்றமா தகவரை யரைத்தலையின்
மாசுணமி ரட்டித்தபோல்
வயிரப் பசும்பொனரை நாண்கோத்த கிண்கிணி
மணிக்கோவை நிரைதொடுத்துச்
சீரொழுங் குறுபூஞ் சிலம்பொலி யலம்பவே
செங்கீரை யாடியருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடியருளே. (3)

அக்கருப் புச்சருக் கரைவட் டுருக்கிமன
மளவுமது ரக்தெவிட்டா
தமுதமொழுகியமொழி யசோதைப் பிராட்டியிழை
யளவுகிழி படுமருங்குல்

ஒக்கலைத் தலையெடுத் திலகுவள் ளைக்குழையி
லுருவக் குதம்பை கொளுவி
யொழுகுந் துளிப்புன லொழுக்கிப் பசும்புழு
குருக்கி மணி யுச்சி பொத்திப்

பக்கமிட் டுலறிய குழற்கற்றை வாரிப்
பணிப்பட முடித்தழுந்தும்
பருமணிப்பொற்கொண்டைசாத்தித்தொடுத்த செண்
பகமலர்த தொடையல் சூட்டிச்

சிக்கறுத்துச் சுட்டி வட்டங் குயிற்றுமுகில்
செங்கீரை யாடியருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடியருளே. (4)

வானைக் குழைத்ததிரு மேனிமழை வண்ணத்து
வழியுங் குறுந்துளியரு
மதிபொருவு திருமுக கிலாக்குழம் பைத்தனி
வழித்தெறிக் தேகடப்பக்

கானைக் குழைத்தவெம் பங்குனிப் பருவஞ்செய்
கதிரெறி வெயிற்படலையிற்
கருகியுஞ் சருகுபடு முளிமரக் காடுபூந்
தாம்பாடு தழைமுகிழ்ப்பக்

கோனைக் குழைத்துக் குறித்துப் பசும்பனைக்
கொம்பர்வம் பவிழ்பனிமலர்க்
கொழுஞ்சுண் ணமுஞ்செழுந் தண்ணறையு மொழுகக்
குழைத்துப் புலர்ந்த வருவோய்

தேனைக் குழைத்தசொற் கோசலை யிளங்களிறு
செங்கீரை யாடியருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடியருளே. (5)

பூவடித் தகடுபடு மடல்முறுக் குடையப்
பொகுட்டல்லி வாய்மெல் லிதழ்ப்
புடைகடை கிழிந்தவழி நறைகொப் பிளிக்கும்
புரந்தர னிருங் கற்பகக்
காவடித் தடமிழலு முழுமணி யிழைத்தசிங்
காதனமு................ ..........முங்
கவிகையுங் கவரியும் பறிகொடுத் திரியக்
கடிந்தமா வலிவேள் வியில்
மூவடிக் கிடமெமக் கருள்கெனக் குறள்வடிவ
முற்றிப் புகுந் திரப்ப
முன்னமே பொன்ன..............ழிப்பக் கொண்டு
மொழி பிழைத்தனை யுதவுமச்
சேவடிக் கவனைச் சிறைக்கூட மிட்டவன்
செங்கீரை யாடி யருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடி யருளே. (6)

ஊற்றுநீ ருருவிதென் பொதியநெடு வரைமுகட்
டுச்சிதொட் டுருவிப்பரந்
தொழுகிவழி யப்பச் சிளந்தென்ற லங்கன்றும்
உகளித்த தண்பொருநை பாய்
ஆற்றுநீ ரிடைகரை யிரண்டுபுற மும்பொரு
தலைத்துவட் டெறியு நீர்வாய்
அலைமுழுகி வலைபீறி வாளைவய லுழவானை
யஞ்சிமஞ் சிடைபாய்ந்து தோய்க்
தேற்றுநீர் கேணிக் கருங்கமுக நெற்றியூ
டிடைதெறிப் பச்செறி கழுத்
திலகப் பழிக்குங் குலைச்செம் பழிக்கா
யினுங்கா துதிர்ந்து சிதறுஞ்
சேற்றுநீ ரிடைபுதைய காற்றுருவி வளநாட
செங்கீரை யாடி யருளே
தேங்கமழ் துழாய்க்கிட்ணை வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடி யருளே. (7)

கலகநிசி சார்புனையு மணிமகுட மிடிபடக்
காலக் கருங்கொண் டலின்
கடையிடிப் படலமுழு மணிவட வரைத்தடங்
கற்குவ டிடிப்ப விழுமா
றலகிலெழு பதுகவிப் படைவெள்ள மொருவழி
யகழ்த்தடி பிடுங்கு நெட்டை
யருக்கல முடுகிப்பொரு தடுக்கழித் துப்புடை
யலைத்துக் கிடக்குங் கழி
சலகமல முள்ளரைத் தண்டொடிய விண்டலைத்
தடவுபல குடுமி மண்போய்த்
தமனியப் புரிசையம் படவரும் புகுதோரண
தடையிடு மிலங்கை முழுதும்
திலகமிட விடுமிரு கடைக்கண் சிவந்தமுகில்
செங்கீரை யாடிய ருளே
தேங்கமழ் துழாய்க்கிட்டின வேங்கட மணிக்குழக
செங்கீரை யாடி யருளே. (8)

அகரத் தனிமுத லாதி யெழுத்தாய்
அருமறை யொரு நான்காய்
ஐந்து வகைப்படு பூதத் துருவாய்
அங்கமு மறுவகை யாய்ப்
பகரத் தகுமெழு கனைகடல் வடிவாய்ப்
படர்புவி யெண்டிசை யாய்ப்
படுமுச் சுடராய்ச் சிவனு மயனுய்ப்
பரம [1]பரமாய
நுகரத் தகுதெள் ளமுதாய் முனிவர்
நுணங்கிய கேள்வியுமாய்
நுவலுஞ் சமயத் தாதா ரமுமாய்
நோற்றவர் மெய்த்தவ மாம்
சிகரத் தழகிய திகிரிப் புயமுகில்
செங்கோ செங்கீரை
தேங்கமழ் மங்கையில் வேங்கட வானு
செங்கோ செங்கீரை. (9)

1. பிரதி. பரமாய்

மருவளர் பூந்தண் டளையவிழ் பரிமள
மடலவிழ் நறைகுதி பாய்
வனமா லைத்துள வமர்திண் புயமணி
வண்ணா கண்ணா (செங்)
தருவளர் பணைபடு சந்தன வனமுயர்
தண்ணஞ் சுனை யூடே
சததள மடல்முகை யுடையக் குடையும்
தமரக் களியளி தோய்
கருவளர் பருவப் பெடைவண் டல்லிக்
கள்ளவிழ் பள்ளியணைக்
கண்படை பயிலுங் கிட்ண புர்த்திற்
களபப் புளக முலைத்
திருவளர் பருதித் திருமறு மார்பா
செங்கோ செங்கீரை
தேங்கமழ் மங்கையில் வேங்கட வாணா
செங்கோ செங்கீரை. (10)

வம்பவிழ் செண்பக மாலிகை யாட
மணிக்கொண் டைமுடிக்கும்
மஞ்சிவர் குஞ்சி சரிந்தினி தாட
வடிந்த மணிக் குழையிற்
செம்பரு திக்கதிர் மகரிகை பொருவு
திருக்குண் டலமாடச்
சிகரத் திண்புய வயிரத் தோள்வளை
சேர்ந்து கிடந்தாடக்
கம்பலை யொழியாத் தண்ணந் துளவக்
கண்ணி முகந்தாடக்
கட்டிய பட்டஞ் சுட்டி முகத்திற்
கட்டழ கூடாட
ஐம்படை யாடப் பரிபுர மாடவும்
ஆடுக செங்கீரை
ஆதிக் கிட்ணையில் வேதத் தனிமுதல்
ஆடுக செங்கீரை. (11)

செங்கீரை முற்றும்.

## 3. தாலப்பருவம்

வெங்கைக் கவளக் கடகளிற்று
வேந்தர் பெருமான் கச்சியர்கோன்
விசுவ நாதன் கிட்ணப்பன்
விரும்பு மமைச்சன் மேழியர்கோன்
அங்கைக் கமல மலர்ந்தபுயல்
அரிய நயினுன் குலமருகன்
அன்கன் மயிலே றும்பெருமாள்
அழியாத் தொண்டை வளநாடன்
மங்கைப் பாதிப் புளிக்காட்டில்
வழங்குங் கனவி லெறும்பொழுக்கு
வழியைக் குறித்துக் கொடிக்கருடன்
வட்டம் புரியக் கோயில்செய்யச்
சங்கைத் தடக்கைப் புயலென்னத்
தழைத்தாய் தாலோ தாலேலோ
தருவே கிட்ணைத் திருவேங்கடவா
தாலோ தாலோ தாலேலோ. (1)

நந்தா வளமைக் கற்புருவ
நடுகா யகமாய் விளக்கொளியாய்
நந்த கோபன் மனையாட்டி
நயந்த திருவாய்ப் பாடிநகர்
எந்தா யழேலென் றெடுத்தணைத்தும்
இரங்கி யிரங்கித் திருமுலைப்பால்
இனிதி னருத்து முறைகொடுத்தும்
இருதா மரைக்கண் ணீர்துடைத்தும்
கொந்தார் சுண்ணம் படுமஞ்சட்
குழம்பு குழைத்து மணமொழுகக்
குடங்கை முகந்து மெய்திமிர்ந்து
கோமே தகமே கோதற்ற
சிந்தா மணியே யெனவிரும்புக்
கிகிரிக் குழகா தாலேலோ
திருவேங் கடவா கிட்ணபுரச்
செல்வா தாலோ தாலேலோ. (2)

பாடும் பதின்மர் பதபாகம்
பழுத்துச் சிவந்த தமிழ்த்துறைச்சொற்
பாவே பாய்பா வெனத்தெளிவே
பழகான் மறைக்குக் தனிவேரே
சூடும் பசிய துழாய்ப்படலைச்
சுடரே யடலா ழித்தடக்கைத்
தொள்ளா மணியே யள்ளலம்பூஞ்
சோலைக் குருகை மகிழ்ப்பருதி
நாடும் புதிய வடிவழகின்
னளினக் காடு பூத்தலர்ந்து
நறையூற் றிருக்குஞ் செழுந்தடமே
நந்தா விளக்கே நான்மறையோன்
தேடும் பொருளே பாகவதர்
தேனே பாலே தாலேலோ
திருவேங் கடவ கிட்ணபுரச்
செல்வா தாலோ தாலேலோ. (3)
பையா டரவப் பணியணையிற்
பதுமம் பூத்த திருக்கடைக்கட்
பரனே பரம பதத்தரசே
பாலே யியலே யியலிசையே
துய்ய வமுதே யமுதகலைச்
சோதி மதியே வேதாந்தத்
துறையே துறையே என்னுயிரே
சூளாமணியே...............
மையார் குவளை மலர்வடிவே
வடியாக் கருணைத் தடங் கடலே
மழலைக் குழல்வாய் வண்டலம்ப
மலருங் கமலத் தருநறையே
செய்யா நிதியே யிருநிதியே
செங்கோல் வளமே தாலேலோ
திருவேங் கடவ கிட்ணபுரச்
செல்வா தாலோ தாலேலோ. (4)

*வரைபாய்க் தெழுந்த கொடிப்புலியை*
*மலைவாய் முழைஞ்சில் மடுத்துருட்டி*
*வாரழை வனத்தை யொடித்தெறிந்து*
*மஞ்சளிஞ்சி [1]கொழு விஞ்சி*

*தரைபாய்க் தகழ்ந்து துறைதோறுஞ்*
*சாடி யிலைத்தண் டறவொடித்துத்*
*தாக்கி நின்ற கருத் தெறுகைத்*
*தந்தா வளத்தைச் சாய்த்திழுத்து*

*விரைபாய்க் தொழுகு சந்தனத்தை*
*வேரு டிறுத்துக் குங்குமத்தை*
*வெளுத்த பளிக்குச் சிலாதலத்து*
*வேரிக் குழய்பாய்க்...........*

*திரைபாய்க் தலைக்குந் தண்பொருனைச்*
*சேர்ப்பா தாலோ தாலேலோ*
*திருவேங் கடவ கிட்ணபுரச்*
*செல்வா தாலோ தாலேலோ,* (5)

*சங்கத் தடங்கள் கருமுதிர்த்து*
*............ஞ்சூலுளைந்து கிடந்தலறித்*
*தாளஞ் சொரி ... ... ... ... .... .... ...*

**தாலப்பருவம் 6 வது கவி முதல் சப்பாணிப்பருவம் 2 வது கவி முடிய உள்ள சுவடிகள் கிடைக்கவில்லை.**

---

1. பிரதி "கொடு" எனவும் உள.

(முத்தமொடு சங்குங் கொழிக்கு)ந் தமிழ்ப்பொதிய
முனிவனுக் கோரொருக் கால்
மூருகொழுகு கோதைக்கு முன்வந்த பூதூர
முனிவனுக் கோரொருக் கால்
சித்தங் கொழித்தகுரு கைப்பதிச் சடகோப
தேசிகற் கோரொருக் காற்
றெரிசனப் புயலெனத் தொழுமிரா மாநுசச்
செல்வனுக் கோரொருக் கால்
அத்தங் கொழித்தபழ மறையுபய வேதாந்த
வாரியர்க் கோரொருக் கால்
அரியகயினுன் மருகன் மயிலேறி கூவத்தின்
அண்ணலுக் கோரொருக் கால்
தத்தன் றனைச்செவிக் கோரொருக் காலின்று
சப்பாணி கொட்டி யருளே
சங்கமறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே (3)

தெரிதலைக் கெழுமுனை யிரும்பற மிதிக்கின்ற
திண்கவட் டுக்கவைக் காற்
றிருகி முறுகியகோட் டடும்பகட் டுழவருழு
தெளிமரங் தடவு கழனிப்
புரிதலைத் தூர்தட்டி முடிகா றறுத்துப்
புரந்திட்ட வழி கொடியிடை
புடைபட்ட தடமுலைக் கடைசியர் பகுத்துப்
புகுந்துகடு நடவனைத்துஞ்
சுரிதலைத் தூர்க்கட்டி நெடிட்டிலை கரும்பிலைத்
தோன்றத் தடித்திரண்டு
சூற்கொண்ட மேற்கொண்ட கதிரீன் றெழுக்கு பாற்
றுளிகோதி யீற்றற்று நீள்
சரிதலைப் பவளக் குலைச்சாலி வளநாட
சப்பாணி கொட்டி யருளே
சங்கமறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே. (4)

அழகுக் கழகிய பதினறுயிர மடவா ரளவுக் கோரளவாம்
அந்த மடந்தையர் குரவையிருங்கூத் தாடுஞ்சிறுகுழகா
கழகத் தமிழ்மொழி மதுர மொழுக்குங் கணிகண் ணன்போத
காகோ தரவன் பாயல் சுருட்டிக் கடல்போதுவதென்னப்

பழகிப் பழகி நடக்குந் தண்டைப் பதபங் கயமுதல்வா
பாடிப்பதின்மர் வணங்கிய திருவாய்ப் பாடித்தெருவூடே
குழலைக் குழைவித் தூது முகுந்தா கொட்டுக சப்பாணி
கோங்கலர் கிட்ணையில் வேங்கட முகிலே கொட்டுக சப்பாணி (5)

மழைமுகத் தளவுள வறுங்குஞ்சி முடியிட்ட
மஞ்சரி புறஞ்சரிந்து
மடலளவு மல்லிகை கிடந்தாட வயிரமுழு
மாணிக்க மாலையாடப்
புழைமுகத் தளவுதர ளக்கோவை கட்டுமொரு
பொற்சுட்டி யாடநெற்றிப்
பொலிவுதரு வட்டமிட் டுதயதின கரனனைய
பொற்பட்ட முற்றுமாடக்
கழைமுகத் தளவொடிய வடவரைக் கேகுமிரு
கப்புவிடு திண்புயத்திற்
கதிரிமைக் கும்பழைய வச்சிரவை டூரியக்
கடகமிடை யாட மலர்பூத்
தழைமுகத் தளவிய சிலம்படிக ளாடவே
சப்பாணி கொட்டி யருளே.
சங்கமறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே (6)

வரையளவு குன்றுஞ் சிகரபுய வயிரமா
மாணிக்க நீல மலையே
வகுளமணி மருள மவிழ் தொடையலுத யக்கடவுள்
மதுரத் தமிழ்க் கரும்பே
திரையளக் குங்கிரண நித்தில நிலாத்துளி
தெளிக்கு மருவிக் கொண்டாலே;
செங்களப குங்குமக் கொங்கையலர் மேன்மங்கை
சீராடு மணிமார்பனே!
விரையளக் குந்துழாய்க் கொம்பரெம் பெருமாட்டி
வீட்டுடைத் திருமருகனே!
வில்லாண்டு மல்லாண்ட திண்புயப் பல்லாண்டு
வேதியர் பிரா னுரைப்பத்
தரையளக் குந்திரண சரணும் புயத்தெந்தை
சப்பாணி கொட்டி யருளே
சங்கமறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே. (7)

சிலராசி வயிரவயி டூரிய மணிச்சுட்டி
செம்பொன்மணி மாடகூடத்
தெருவிடை யெறிந்துள் விடமுமிழ் குறுந்துளை
செறிந்தவளை முள்ளெயிற்றுப்
பலராசி மணிமகுட பத்தியுல கஞ்சிந்து
படம குடமுச்சி யுச்சிப்
பரிதிவெயி லெறியுமணி யிடைபழுத் தியதனிப்
பள்ளியறை கொள்ளி செருக்க
குலராசி நிருதரெதிர் கண்டுதொழு பஃறலைக்
கொண்டலிரு பதுதடக்கைக்
கொப்பெருந் தெருவுமொழி பூப்பகிரை வாய்ப்பக்
கொழுத்திய கொழுந்து விடுநீச்
சலராசி யெரியவரி சிலைகடை குழைத்தமுகில்
சப்பாணி கொட்டி யருளே
சங்மகறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே. (8)

மலைக்கோயில் குடிபுக்க கொல்லியம் பாவையை
மயக்குந் திருக் கடைக்கண்
மகளிர்புள கித்தகள பக்குரும் பைக்கோட்டு
வட்டமுலைக் கொட்டு பனிநீர்க்
கலைக்கோல மேகலா பாரப் படீரக்
கதம்ப கஸ்தூரி முழுகிக்
காவிரித் துறையினிற் புனல்குடைந் தாடக்
கடைப்புலவு நாற்ற மொழியக்
கொலைக்கோப வன்கழைக் காண்டீப மதனைக்
குறித்துவிரு தூது காளக்
கூங்குயில் வளைத்ததே மாங்கொழுங் கனியருக்
குலை தூங்கு தலைசிதறவுந்
தலைக்கோல வாளைபாய் தண்பொருநை யந்துறைவ
சப்பாணி கொட்டி யருளே
சங்கமறை முறையோங்கு மங்கைநகர் வேங்கடவ
சப்பாணி கொட்டி யருளே. (9)

சப்பாணி முற்றும்.

## 5. முத்தப் பருவம்

அருகச் சிவந்தகிடை கிடைபட்டு நீர்ச்சுனை
யகம்புறமு மீர மொருசற்
றணுகாது நசையற் றழுக்கேறி யிருகடை
யறுப்புண்ணு மென்று கருதே
முருகக் சிவந்தபொற் றகடுபடு பூந்தோட்
டுறுப்பரக் காமபலங்காட்
டொழுகுகுட வளைமுழுகு முத்தமுடை பழகுதகை
யுவளுற் றிருந்துவர்க்கும்
பெருகச் சிவந்தமக ரந்தலை யிடத்திற்
பிறக்குமொரு கோடி முத்தம்
பில்கும் பசும்புலவு நாற்றமே மல்கும்
பிடிக்குங் குடங்கை கழுவி
பருகச் சிவந்துமன முருகலர் சிவந்தசெம்
பவளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்கு மலர்கிட்ணை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (1)

கண்ணுறுத் துளிமடற் கடை (யிற்பு) டைத்துக்
கவிழ்ந்திடை யுருமலோடுங்
காட்டகத் தல்லிக் கொழுங்கமல வீட்டிற்
கனங்குழைப் பேட்டன்னமும்
தண்ணுறுக் களபக் கொழுங்குங் குமக்கலவை
தலையுறுப் பச்சை யிளநீர்த்
தனஞ்சுமக் குங்கொடி யிடைப்புடவி மங்கையுந்
தழுவுந் துணைப் புயத்திற்
தெண்ணுறுப் பரிமளத் துளபக் கடைக்காம்பு
திருகித் தொடுத்த தொடையற்
சினையுறுக் கோமளக் காமரக் களிவண்டு
தீங்குழற் பூங்குழ தவாய்ப்

பண்ணாருக் கனிமழலை யிசைபடிக் குஞ்சுவைப்
பவளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (2)

குரும்பைப்பருவத் தரும்புமிரு கொங்கை யசோதைக் கொருமுத்தம்
குழையத்தழுவி முகந்தநந்த கோபர்க்கினிதா மொருமுத்தம்
விரும்பித்தொகுத்த தமிழ்க்குருகை வீறற்குவட்டா வொருமுத்தம்
வேதவியாதர்க் கொருமுத்தம் விண்ணோர் தமக்கு மொருமுத்தம்

கரும்பிற்கனிந்த தமிழ்க்குலசே காக்கோவேந்தற் கொருமுத்தம்
கற்புக்குருவா கியபுதவைக் கரும்பைப்பயந்தோற் கொருமுத்தம்
வரும்புத்தமுத மொழுக்குமுழு மணிவாய் முத்தந் தருவாயே
மங்கைத்திருவேங் கடவாணா! மணிவாய்முத்தந் தருவாயே. (3)

தொட்டதொரு வட்டத் தடங்கருங் கடலகடு
தூங்குந் தரங்க நீங்காச்
சுழிமுகந் தொழுகுபுனல் வழிமுகத் தொட்டுத்
துறைப்படவு கடவு குளியாள்
விட்டதொரு தட்டறப் பட்டுருவி நிலையற்ற
வெள்ளத் தலைப்பள்ள நீர்
விளைமுத்த மிப்பியொடு வலைமுற்று நிறைவித்து
வீங்குங் கழிக் கரைமுகத்
திட்டதொரு பட்டடைக் கடையர்முடை பழகுதசை
யிருபுடை யொதுக்கிக் கழித்
தெடுத்தநித் திலராசி யைத்துளை விடுத்திழை
யிணக்கிய கொழுங் கோவையுட்
பட்டதொரு கட்டழகு சுவைபல பிறக்குமோ
பவளவாய் முத்தமருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (4)

மதமழை கவுட்கொண்டு மடையுடைத் தொழுகுதுளி
வற்றா துவட்டெழும் பார்
மடமங்கை யுடலுழுது நிழல்கண்டு விழிவடவை
வடிவுருக் கொண்டு தண்டிக்

கதமொழுக நிலைபெற்ற............ கறையடிக்
கறைபடாப் பிறை வள்ளுகிர்க்
கண்டைமணி யிருபுடை கிடந்தறைய வொருபுடை
கலக்கிய நராந்தகன் போர்
உதயமெதிர் கதுவிமணி முடிதிருகி யெறியுமிக
வுயர்படைத் தலைவ னனுமற்
குந்தித் தடத்துருவு கோகாள முழுமுளரி
யூடுதிக் கின்ற பிரமன்
பதவிபெற வரமுதவு நயனார விந்தமுகில்
பவளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (5)
காட்டிற் பசுங்கழைக் கப்புவிட் டொருகோடி
கண்கிளைத் தடவி மூடும்
கண்ணொருங் கியபண்ணை யழியாத பலபல
கணுத்தோறு மிறுகி முற்றிக்
கோட்டிற் புறக்கடைக் குடகாற்று முறியாக்
குழைத்தரா விய பலவழிக்
கொண்டு மண்டிய புகைப் படலை யிடைசுற்றிக்
கொழுந்தெரி முருங்கி யெரியும்
தோட்டிற் பணைத்துத் தெறித்துதிரு முத்தஞ்
சுண்ணம் படும்படாமற்
சோலைமழை யிடையருக் கானகத் தொழுகுந்
துறைக்கலுழி யூடு தாழும்
பாட்டிற் பழுத்து மதுரக்கொழுஞ் சாறொழுகு
பவளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (6)
கோளைவான் முழுமதிக் கடவுளைப் பிடியெனக்
கோட்பட விடுத்த தேய்ப்பக்
குழைத்திளக் கியமர கதச்சாய மொழுகிக்
குழம்புபடு நெட்டிலைக்கே

வாளைவான் முகமிட் டறைந்துகுதி பாய்கமுக
மணிமிடற் றொழுகு கோற்றேன்
வட்டத் தடும்புழை படுந்தடக் கைநலை
மதம்படு பொருப்பு நீட்டிந்
தாளைவான் வெளிமுக டுடைப்பசிறு வியமணிந்
தகடுபடு மாடகப் பூந்
தவளப் பளிக்கறைச் சந்த்ரகாந் தத்தொழுகு
தண்ணீர் பரந்து தென்னம்
பாளைவா னிடறுந் தமிழ்க்கிட்ண புரவள்ளல்
பவளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (7)

தடமொழுகு திரைமுகடு பொருதகழி வழிமுழுகு
தருணமுழு மணி நிறைக்குட்
.................பணபணி நிலையற்ற புழலகழி
தாழ்ந் தொளித்துக் கிடந்து
விடமொழுகு புழைபடு குறுந்துளைப் பற்கடை
விளிம்பிடை முறிந்து நெரிய
வெட்டிய கடைத்தலைய நெட்டைவார்ப் புடைதூக்கி
விழி.............வடவையவியப்
புடமொழுகு தழலிற் சிகைக்கொழுந் தூடெழு
புகைப்படலை வீங்கு பகுவாய்ப்
பொழிகுருதி யருவிநீ ரெதிரெடுத் திதழ்வழி
புறம்பொங்க வரவினம் போற்
படமொழுகு திருநடம் பழகுகுழ மணமகவு
பவ்ளவாய் முத்த மருளே
பாங்குயர் பணைக்கோங்க மலர்மங்கை வேங்கடவ
பவளவாய் முத்த மருளே. (8)

படிதலை யெடுக்கின்ற மடலிளங் கதலிப்
பசுங்குருத் திரவியண்டப்
பரப்பிடைப் பட்டுருவி வட்டமதி மண்டலம்
படுபுவன முங்கடந்து

முடிதலை யெடுத்துருவி யடையவொரு தடையற
முறுக்குடைய விரிதலின்றி
முற்றுமொரு நிலைபெற்றுக் கொண்டவடி வழகு
முஞ்சியுஞ் சிறு குஞ்சியும்
தொடிதலை யெடுக்கின்ற தடவரைப் புயமிசைத்
துவளுமொரு தவள முன்னூற்
றெகையுநகு மணிமகர குண்டலமு மாய்வந்து
தோன்றிய குறட் பிரமமாய்
அடிதலை யெடுக்கின்ற வண்ணமங் கைப்பதியி
னண்ணல் மணி முத்தமருளே
அருவிமுகில் பொருகிட்ண புரநகரில் வேங்கடத்
தரசுமணி முத்த மருளே. (9)

அதிருந் திரையெறி கின்ற பயோததி
யரவணை புறமொருவி
அச்சுத னேபச் சைத்திரு மாலே
ஆல மிளந்தளிரிற்
கதிருந் திங்களு நிகரிய சங்குங்
கைத்தலை யாழியுமே
கவரா தொருவி முலைப்பா லமுதங்
கனிவாய்ப் பருகாமற்
பிதிரும் பழகிய பல்பகி ரண்டப்
பித்திகை யொத்திடியப்
பெருகிய வெள்ளத் தேகோ ததியில்
பிறழுங் கண்டுயிலால்
முதிரும் பாகதி ராகக் குழவீ
முத்த மளித்தருளே
முத்தமிழ் மங்கைத் திருவேங் கடவா
முத்த மளித்தருளே. (10)

அடிக்குத் தொடைக்குந் தொடை வழுக்கா
அசைச்சீர்த் தளைக்குந் தளைமுகத்தின்
அறையும் பாப்பா வினத்தொகைக்கும்
அலங்காரச் சூத்திரத்தந்த

முடிக்குந் தலைமை முதலகர
மொழியுட் படுத்தி யைவவைத்தாய்
மொழியு மெழுத்துச் சொற்பொருட்பால்
முற்றங் கொழித்த யாப்புவிதி
கொடிக்கும் பொழுதி லுபங்கடத
நுவலக் கருதி யளவற்ற
நூற்றுப் பத்து விரித்தொகைய
னோன்மைத் துறைக்கே பகுத்தெடுத்து
வடிக்கும் பதின்மர் தமிழ்க்கனியே
மணிவாய் முத்தந் தருவாயே
மங்கைத் திருவேங் கடவாணு
மணிவாய் முத்தந் தருவாயே (11)

முத்தம் முற்றும்.

## 6. வாரானை.

செஞ்சுருக் கொண்டுருவ மருவுமக விருளற
நிறைக்கின்ற தனி விளக்கே
நித்திலக் கொத்தடுக் கியவயிர மாணிக்க
நிரைகொத் தெடுத்த செண்டே
பஞ்சுருக் கொண்டபத புண்டரீ கத்திருப்
பாவை விழி யாநந்தமே
பருவக் கரும்பைப் பிழிந்துமது ரச்சுவை
பழுக்குங் கருப்பு வட்டே
பிஞ்சுருக் கொண்டுவரு துண்டக் கலாமதிப்
பிளவினிரு கவடு கொளுவிப்
பிரசங் கிழித்துமத மழைசிந்த மடமயிற்
பேடைக் குழாங் களிப்ப
மஞ்சுருக் கொண்டகரு ணைக்கொழுங் கொண்டலே
மண்டலந் தொழ வருகவே
மங்கையம் பதிவாழ்வு தங்குதிரு வேங்கட
வனத்துழாய்க் கடல் வருகவே. (1)

இழுதுபடு கொதிமுக மெழுந்துவெண் ணுரைபொங்கி
யெங்கும் பரந்தொழுங்கா
யேற்றிய முடைத்தாழி வாய்க்கடையி லூற்றிருந்
தெறிகுமிழி சிதறித் தெறித்
துழுதுதுளி யறவற்றி முற்றுஞ் செழும்பட்
டூறிக் கனிந்த வழிகோத்
துருவத் துழாவிய தடக்கையி
லுடக்கிய மணிச்சட்டுவம்
பழுதுபடு தலையின்றி யின்றிடையர் மகளிராய்ப்
பாடிதொறு மாடை படரும்
பாற்குழம் பைப்பவள வாய்க்கிதக் குஞ்சூடு
பார்த்துப் பசித்த பண்டி
முழுதுமிமி ரப்பொருமு மொருமூச்சி னிற்பருகு
முகில்வண்ண னெதிர் வருகவே
முத்தமிழ்க் கிட்ணபுரத்தில்வேங் கடவாண
மூவுலகுந் தொழவருகவே. (2)

பண்ணைக் குழைத்தகிளி மொழியிடைத் தாய்பேர்
படாமுலைக் காம்பு முறுகிப்
படுதுளி மடுத்தொழுகு பாலமுது பிதிரோடு
பருவத்தி லுருவத்தலைக்
கண்ணைக் குழைத்தவெண் சங்கிற் பிலிற்றிக்
கனிந்து குழையும் பவளவாய்க்
கடைவைத் திருத்திக் கவுட்புடை யுறுத்தியொரு
கடை காசி பொத்திவிட்டு
.........................................
.........................................
.........................................
.........................................
மண்ணைக் குழைத்தபொற் காப்பணியு மொருகுழ
மணம்பிள்ளை யெதிர்வருகவே
மங்கைநகர் வளமோங்கு மெங்களலர்மேன்மங்கை
மணவாள னூர் வருகவே. (3)

முருக்கவிழு மென்முகை முறுக்குடையு மடலகடு
முழுதுஞ் சிவந்த பொழுது
முருக்கொழுகு மகரந்த மருக்கொழுகி வழியாது
மூால்விரி சிறை வரியளிப்
பெருக்கவிழு நசையிசை பிறக்கமடல் குடையாது
பெருமிதத் துயர்திணைப் பால்
பெட்புற விரும்பாது கட்புலனு மணுகாது
பிடிபூ முகந்து கொரினுந்
தருக்கவிழு மதிலொரு மனங்குழைந் தளவளாய்த்
தழுவாது கழுவு குருதித்
தசைதலை யெடுத்துலறி வசையுலவு மென்பரவை
தக்கதோ செக் கமலமும்
செருக்கவிழு மொருபவள மல்லிகையு நிகர்வரும்
செய்யவாய்ப் புயல் வருகவே
செல்வந் தமிழ்க்கிட்ணை மல்குதிரு வேங்கடச்
செவனு ரெதிர் வருகவே (4)

அழுங்காடு விரிசிறை வரிக்கவச மெதிர்சருவி
யமராடு சமர பூமிக்
கங்கத்தி னிடையிடை விளங்கப் பிணித்துவா
ரறவீக்கு கடையிறுக்கு மென்
றெழுங்காடு விருதுடக் குங்கொடிப் படையாடு
முன்மத் தாக்கர் வன்மத்
தாடுருவி யப்புற முருவிபோ டப்பகழி
யொருதொடையி லாயிரங் கோத்
தெழுங்காடு கடலுலகு குலகிரி முகட்டுச்சி
யெண்டிசா முகமுங் கடந்
திருபுடக் காடதட மடைதிறக் குங்கடாத்
தெட்டுவகை வேழ மஞ்சச்
செழுங்காடு முழுவதுந் தசமுகன் றலைபடச்
சிலைதொட்ட புயல் வருகவே
தெண்டிரை கடைந்துலக முண்டபெரு வாயனே
தென்மங்கை யாய் வருகவே. (5)

மனங்குழையு மொருபிள்ளை மாணிக்க மேபிள்ளை
வரிவண்டு கொள்ளை கொள்ளா
வள்ளிதழ்க் கமலத் தகட்டகட் டுள்ளொழுகு
மண்டபத் தரசிருப்பத்
தனங்குழையு மகரப் பசுங்குலை சுமந்துருவு
தருவஞ்சி யிடையு மடல்வாய்த்
தனியனிச் சம்பொரு மலத்தகச் சீறடித்
தளிரு முறை தள்ளாடநின்
றனங்குழையு நடையழகு வடிவொழுகு குடிபுகுந்
தடியவர் வணங்கு முடிமீ
தஞ்சலி புரிந்துதுணை நெஞ்சகங் குழையுநிதி
யளவற்ற செல்வ நல்கக்
கனங்குழையு மணிவண்ண தண்ணந் துழாய்க்கொழுங்
கண்ணிமழ விடை வருகவே
கடத்துளி யருக்களி றழைக்க வருதிருவேங்
கடத்துறைவ ளூர் வருகவே. (6)

கோட்டுக் குரும்பைத் துணைமுலைச் சுவடு
குடியேறி வீற்றிருக்குங்
குங்குமக் கொங்கையைக் கொடியிடை பொருதெனக்
கொஞ்சு மஞ் சுக மிழற்றச்
சூட்டுங் குறுந்தோட்(ட) டுக்குமல் லிகைநறவு
துண்ணென் றொழுக்கு விடுபூந்
தொடைசெருக முருகளவு கொந்தளக் கற்றைமுடி
சூழியக் கொண்டை சரியத்
தீட்டுஞ் செழுந்திலக வட்டத் தரும்பித்
தெறித்தகுறு வேர்வை யொழுகச்
சிவந்தமுழு மாணிக்க மிடையழுத் தியவளைக்
செங்கையிற் கந்துகத்தை
வாட்டும் பளிக்கரை வளைத்தமங் கைக்கரசு
மாட வீதியில் வருகவே
மலைகுனிய நின்றபெரு மாள்வருக கருணைபொழி
மழைவள்ள லார் வருகவே. (7)

கண்டலிற் கண்டலர வாய்ப்பருவ நெட்டிலைக்
கவடுபடு முடவு கோட்டிற்
கண்ணிகை முறுக்குடைக் குஞ்சுண்ண மடல்வழி
கவிழ்ந்துமண நாறு கழியிற்
கொண்டலிற் செஞ்சாலி வய(லி) ற் சினைச்சங்கு
குடவயிற் றளவுநிறை சூற்
றலைக்கரு நிறைந்தலறு கொண்டழின் னுருவியெறியக்
குறித்த வெளிமுகடணவுபூங் கொத்திற்
..........................................................................

..........................................................................
குழைத்தசெம் பவளக்குலைத்
தண்டலிற வகுளைத் தடத்திற் றடத்துநீரணிமுத்த
வண்டலிற் பொருநைமதர் வானைபாய் மங்கைநகர்
வள்ளலா ரெதிர்வருகவே
மறைவாழ வேங்கடத் துறைவார் தமிழ்க்கிட்னை
வள்ளலா ரெதிர் வருகவே. (8)

குயிலைக் குழைத்த சுவை மழலைக்
குழல்வாய் மொழியா ரிளம்பாளைக்
கொத்து விரித்த செம்பழுக்காய்க்
குலைதூங் கியபச் சிலைக்கமுகின்
வெயிலைக் குழைத்த கொழுங்கிரண
மிளிரும் பசும்பொற் றகடிழைத்து
விரவிக் குயிற்றும் பழவயிர
மின்னுக் கொடிபோல் வடங்கோத்துத்
துயிலைக் குழைத்த குவளைவிழித்
துணைபோம் வள்ளைக் குழைகிழிப்பத்
துணைச்செவ் விளநீர் முலைததும்பக்
தொடையா ருசற் புறத்தேறி
மயிலைக் குழைத்து விளையாடும்
மங்கைப் பெருமான் வருகவே
மருவே கமழுந் துழாய்ப்படலை
வடவேங் கடவா வருகவே. (9)

கிள்ளைக் குதலை மதுர மொழிக்
கெண்டைக் கருங்கட் பவள விதழ்க்
கீற்றுப் பிறையைப் பழித்த நுதற்
கிரண தரள மணிச்சுட்டி
வள்ளைக் குழைக்கொந் தளத் தோட்டு
வயிரந் திரவி வெயி லிமைக்கும்
வதனச் செழுந்தா மரைபூத்த
மடற்பூங் குமுத வள்ளத்தில்
வெள்ளத் திவலைத் தெள்ளமுது
விரவித் தெளித்த குறுமுறுவல்
வேயைத் துணித்த மணிவரைத் தோள்
மேருப் பொருப்பை வென்ற முலைப்
பிள்ளைப் பருவத் தன்ன நடைப்
பிராட்டி நெடுமால் வருகவே
பெருமான் மங்கைப் பதி புரந்த
பேரா யிரத்தான் வருகவே. (10)

புயலே! வருக! தொழுந் தடியர்
பொன்னங் கமலக் கனை கழலிற்
பூவிட் டிறைஞ்சிக் கடைக்கண் முகில்
பொழியக் கருணைப் புனல் படியுஞ்
செயலே கருதி முழங்கு துழாய்த்
திருப்பாற் கடலே வருக பழஞ்
செழுந்தண் சுருதி யுபநிடதத்
திருமால்! வருக! பதின்மர் தமிழ்
இயலே! வருக! மதுரிக்கும்
இசையே! வருக! எனை யாளும்
எம்மான்! வருக! உலகளந்த
பெம்மான்! வருக! செஞ்சாலி
வயலே விளைக்கும் மங்கைநகர்
மாலே! வருக! வருகவே!
மகுடச் சுடிகைப் பாம்பணையில்
வடவேங் கடவா! வருகவே. (11)

வாரானைப்பருவம் முற்றும்.

## 7. அம்புலிப்பருவம்

மறைமுழுது மலைமுகடு பொருவுதிறை யெறியுலவு
மகர வாருதி சூழ்ந்தபூ
மண்டலத் தலைமுழுது முண்டுனக் கிவனுக்கு
மண்டல மனைத்து முளதால்
கலைமுழுது முளதுனக் குன்போ லளப்பரிய
கலைகளிவ னுக்கு முளதே
ககனத் துலாவருவி மானமுள துன்போற்
கலாப மொழு கியவிமானத்
தலைமுழுது முளதுனக் குதையத் தலைப்படுஞ்
சலராசி யுளதுனைப் போற்
சலராசி யுதையமிவ னுக்குமுள தென்னுஞ்
சமான மொழிவது தக்கதாம்
அலைமுழுது மொருபுடை வளைக்குமுல கிற்கலந்
தம்புலீ யாடவாவே!
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (1)

பாலோடு கடல்முக டுதித்தெழுவை நீயுனது
பண்பென்ன மண்புரக்கும்
பழமறைப் பாலோது கடலுதித் தெழுமிவன்
பாரிசா தத்தமரர் தங்
காலோடு கால்கிளைக் கோங்க நின் கலையமுது
கருதியு மளித்தி நின்போற்
கடல்கடை யமுதத்தை யவர்கட் களிக்குமிருள்
கங்குற் பிழம்பை யள்ளி
மேலோட வெண்ணிலாக் கற்றைக் கொழுங்கலை
விரிப்பைநீ யிவனு மொழியா
வெவ்வினை யிருட்பிழம் பகலப் புகழ்க்கறை
வீசுமிரு வர்க்கு மொருபேர்
ஆலோ னெனத்தகுந் தக்கதை யுணர்ந்துணர்ந்
தம்புலீ யாடவாவே
அங்கை யோங்கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (2)

செம்பரத் தலர்வட்ட வடிவிற் கடற்புடை
　　சிவந்துதித் தெழுவை யிவனும்
தெண்டிரைப் பாற்கடற் றிருமுகத் தாமரை
　　சிவந்துதித் தெழுவ னுன்போல்
வம்பரத் தகவிதழ்ச் சேதாம்பல் முழுவது
　　மலர்த்துதி யுனைப்போ லிவன்
மதுரம் பழுக்குந் தமிழ்ப்பதின்மர் செம்பவள
　　வாய்த்தலைச் சேதாம்பலைத்
தம்பரத் தடிபெற மலர்த்துவ னிருட்பொழுது
　　சலசங் குவித்தி யின்போற்
சரணடையு மொருதொண்டர் கைக்கமல முழுதுந்
　　தலைக்குவித் திடுவனீயே
அம்பரத் தாகிவன் பீதாம் பரத்தசன்
　　அம்புலீ யாடவாவே
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
　　அம்புலீ யாடவாவே. (3)

சங்கத் தடங்கட லுதித்துமுல கத்திடைச்
　　சலசத் திரப்படுதி நீ
சந்ததந் தெண்டிரைப் பாற்கடல் பயின்றுமொரு
　　சற்றுஞ் சலப்படான் காண்
துங்கத் தான்சடைப் பகுதியினை யிவனுடற்
　　றோற்றந் துழாய்த் தொடைநறை
துளிப் பதன் றித்தருந் திருவொடு
　　துளங்கிச் சடைப்படான்காண்
வெங்கட் சினத்தரவு கௌவியு முனைத்தீண்ட
　　மெலிதிநீ யிவனுனைப் போல்
மெலிவனோ கணபணத் தரவப் படங்கிழிய
　　மெல்லடிச் சுவடழுத்தும்
அங்கக் களங்கம் படைத்தியிவ னகளங்கன்
　　அம்புலீ யாடவாவே
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
　　அம்புலீ யாடவாவே. (4)

உரைக்கின்ற பக்கத்தி லொருபக்க முடல்குறைந்
தொருபக்க மீ வளருவாய்
உலகத் துரையறுத் தெண்ணம் படுப்பக்கம்
ஊழி யுக மேலனைத்தும்
துரைக்கின்ற கடையுகத் தெழுவகைக் கடலுங்
கடைச்சக்ர வாள கிரியும்
கரையற்ற போற்றந்த காரப் பெரும்புறக்
கடலுஞ் சரா சரமுமாய்
இரைக்கின்ற வெள்ளத்தி லுள்ளவை வயிற்றடைத்
தெட்டாக் கவட்டு கெட்டை
யீற்றிளந் தளிர்வட விலைப்பள்ளி கொள்ளுமிவன்
என்பிற வியைப்பிணியை மொண்
டரைக்கின்ற முகிலென்ன வளருமிவ னொடுகலந்
தம்புலீ யாடவாவே
அங்கையோங் கியதிகுரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (5)

படிமுற்று மிரவே படைத்துப் படைத்தகலை
பறிகொண்டு கொள்ளை கொள்ளப்
பவனகெடு வெளிமுகட் டமரரைக் கண்டுடல்
பதைத்தரவு கண்டு குறைவாய்
கொடிமுற்று மொருபெரிய திருவடிக் கங்கங்
.........குலைந்தரவமஞ்சிக்
குடிபோக வடிவழகு குடிகொண் டடுத்தகலை
குன்றுது குறைவில னிவன்
தொடிமுற்று முருவக் குழைத்த பழவயிரச்
சுடர்க் கற்றை விட்டெறிக்கும்
தொல்லைவெம் பருதியை யடைக்கலம் புக்கமைத்
தோற்றத் தரும்பி யெழுவாய்
அடிமுற்று மடியவர்க் கொருபேத மின்றிவனெ
டம்புலீ யாடவாவே
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (6)

பூகத் திளம்பாளை மணிமிடற் றடருமப்
பூங்கவரி பொதி யவழ்ந்த
புரங்தொறு சிலிர்த்தமுக கலிலிலவு
பொங்குவ தெனத் தயங்கும்
பாகத்தின்முகமெதிர் நிலாமுக்கி பூரணைப்
பழவமுல் கொழுந்த வெம்பிப்
படர்த்துக் தெள்ளமு திறைத்திறைத் தொழுகவிடு
பானம் பொருதடங்காத்
தாகத்தி னெறிதிரைத் தண்பொருநை கள்ளிடைச்
சரிந்தவரி மணல்வெள் ளிடைத்
தகுமஃ றிணைக்குடல் குளிர்ப்பிக்கு முன்னையொரு
சாளரப் புழைவழி நுழைந்
தாகத்தி னூசங் தழீஇக்கொள விளிக்குமிவன்
அம்புலீ யாடவாவே!
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (7)

வருமருந் துதிமுதற் கற்புடைப் பிடிநடை
மடக்கொடி யிடைப் படர்ந்து
வள்ளமுலை யமுதொழுகு கிள்ளைமொழி மணிமகர
வள்ளைக் கனங்குழைக்கே
பொருமக் துணர்விரி கருங்குவளை பொறிகொடும்
போர்வேட்ட கூர்வேற்படைப்
புத்தமுத மொழுகுமொழி முத்தநகை முகமதிப்
பூவையரை மேவாதவிட்
டொருமருந் தலைவர்பொருள் மேற்பிரியு மிரவிடை
யொழித்தவரை யொட்டு முன்னை
ஊழிவெங் கடையுகத் தீயெனவு முள்ளத்
தொறுப்பக் குறைந்த குறைகண்
டருமருந் ததவியடிமைக்கொள விளிக்குமிவன்
அம்புலீ யாடவாவே
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (8)

நீரகத் தெறிதிரை முழுக்கிவிழு மணிமுரசு
நிலையிற் கடிப்பிடாது
நீண்டகழி தாண்டிக் கரும்புன்னை யம்பொழில்
நெருங்க மணி வேர்கிளைத்துப்
பாரகத் தாழுதுநனி வரிமணல் கொழித்துப்
பசுங்கரை கரைத்திடிக்கும்
பரவைச் சலப்பட்டு மந்தரப் பட்டும்
படிற்றொழுக் கரை நிகர்த்துஞ்
கூரகத் தொழுகுவடி சுடரயிற் படையிற்
குருந்த நிலவுச் சுரிகையைக்
கொடிநாளமுளரியி லெறிந்துமலர் மங்கையுறை
குடியலைந் தனையெனத்தண்
ணாரகத் திகிரியை யுடக்கா தழைக்குமிவன்
அம்புலீ யாடவாவே
அங்கையோங் கிபதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (9)

தற்பணி விடைக்கிது திருப்பதி யெனக்கருது
தருமத்தி னிளைய நயினன்
தம்பிச்ச பூபாலன் நம்பித் திருந்தக்க
சன்னதிப் பொற்கம்பமும்
பற்பல திருக்கா வணப்பத் தியும்பணிப்
பட்டமணி மண்டபமு மொன்
பதுநிலைக் கோபுரமு மணிதிகழு மணிநெற்
பகுத்திடுங் கொட்டாரமும்
பொற்பணி திருப்பதக் கத்தொகையு மங்கியும்
புனையு மணி யபிடேகமும்
பூவையர்க் குத்தகு திருச்சொருக் கும்புதிய
புதியவள முந்தக்கதால்
அற்பணிய றுன்கவிகை யென்றுனை யழைக்குமிவன்
அம்புலீ யாடவாவே!
அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
அம்புலீ யாடவாவே. (10)

எரிவேட வடிவழகு குடிகொண்ட விடையர
    னிலங்குஞ் சடைக் காட்டகத்
  திடைப்புக் கொளிக்கினு மடக்குந் தடந்திரை
    யிரைக்குங் கழிக் கானல்வாய்ப்
பிரிவேட மொழியின்றி வழியும் பயோததிப்
    பெற்றதாய் வீட்டிடத்திற்
  பெட்பினொடு தலையிட் டொளிக்கினும் பகிரண்ட
    பித்திகைத் திகிரி வரையுட்
புரிவேட ரரிதினைத் தாளுழுது வித்தும்
    புனத்திடைத் தினைவிளைத்துப்
  பொங்கலிடு வெங்கனற் புகையிடை யொளிக்கினும்
    பூதலத் துனைவிடுவனோ
அரிவேட மருவும் பிரான்றிகிரி தொடுமுணர்ந்
    தம்புலீ யாடவாவே
  அங்கையோங் கியதிகிரி மங்கைவேங் கடவருடன்
    அம்புலீ யாடவாவே. (11)

அம்புலி முற்றும்.

## 8. சிற்றில்பருவம்

கிள்ளை மயங்கு தீங்குழல் வாய்க்
    கீதம் பழுத்த மழலைமொழிக்
  கெண்டை மயங்குங் குவளைவிழிக்
    கீற்றுய்ப் பிளவு தோற்றுமதிப்
பிள்ளை மயங்குந் திலகநுதற்
    பேதைப் பருவ மதாகு மரம்
  பெருக மயங்கி முருகுயிர்க்கும்
    பிணையற் கருங்கொந் தளத்தினளிக்
கொள்ளை மயங்கு மிசைகரம்பு
    கொட்டிக் குழைத்த முறுக்காணிக்
  கோவை மகர யாழெடுத்துக்
    குறிக்கு மலங்கா ரமுழுணரேம்
வள்ளை மயங்குங் குழலசைய
    வளைக்குஞ் சிற்றில் சிதையேலே
  மங்கைத் திருவேங் கடநாதா
    வளைக்குஞ் சிற்றில் சிதையேலே. (1)

தொடியார்க் கிளைற குடங்கை விரற்
றொகையுங் கருக மழலையிசைச்
சுரும்பார்க் கின்ற குழல் வகிர்ந்து
சொருகும் பருவ மலர் கருகக்
கொடியாய்த் துவளு மருங் கொடியக்
கொலையார்க் கின்ற விழிக்கடை......
...................................தொழுகக்
கொழிக்கும் புதிய வரிமணலைப்
படியார்க் கின்ற குட வயிற்றுப்
பணிலத் தலையி னுலையேற்றிப்
பவளக்...............................
...............ப பாக்கொழுக
வடியாச் சிறுசோ றடுகின் றோம்
வளப்பார் சிற்றில் சிதையேலே
மங்கைத் திருவேங் கடநாதா
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே. (2)

கழுவா மணியி னடுப்பியற்றிக்
கனகத் தகடுபடுங் குழிசிக்
கடைவாய் வடிம்புத் தலையலம்பக்
கவரும் புதுத்தே னுலைப்பெய்து
குழுவாய் மகளிர் ரெண்மணியைக்
கொழுகாற் கழுந்துப் பூணுலக்கை
குடங்கைப் பிடித்து முறையோச்சிக்
கொழித்துக் களைந்து கொய்தரித்தே
எழுவா யொழுகுஞ் செழும் பவளத்
திலகுங் கொழுந்தீக் கடை மூட்டி
யெறியுங் குமிழி யெழுந்து கொதித்
தெறிக்குந் திவலை நுரை பொங்கி
வழுவா திழியப் பதம் பார்த்து
வடியாச் சிற்றில் சிதையேலே
மங்கைத் திருவேங் கடநாதா
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே. (3)

உருக்கும் பருவ வடிவழகின்
உருக்கு மணிநா யகியோடு
உந்தி பூத்த செழுங் கமலத்
தொருவன் பெருமான் கல்வி நலம்
பெருக்கும் பின்னைப் பிராட்டி யொடும்
பிள்ளைக் கனிவண் டடை கிடவாப்
பெருந்தண் பணைதாழ் கற்பகப் பொற்
பிணிமொட் டலரு மலர்கேட்பச்
சுருக்குத் தொடைய லரமகளிர்
சூடா தன்றித் தரைமடந்தை
சூடத்தகுமோ வெனமொழிந்த
சார்பூந் தருவில் வேர் கிளைத்து
வருக்கஞ் சிதைத்தாக வா மனையோ
மாலே சிற்றில் சிதையலே
மங்கைத் திருவேங் கடநாதா
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே (4)

அல்லைக் குழைத்த வடிவழகன்
அயோத்திக் கரசன் கோசலைநா
டளிக்குஞ் செங்கோ லபிராமன்
அழல்வாய் மடுத்த வனம்புகுந்து
கல்லைக் குழைக்குங் கொழுங் கமலக்
கடைக்கண் சிவந்து மடை திறக்குங்
கருணைக் கடல் போற் பஞ்சவடிக்
கரையிலாசு வீற்றிருப்ப
எல்லைக் குழைத்த முடியரக்கன்
இளம்பேட் டனத்தைக் கவர்ந்து சிறை
யிருத்து மிலங்கைப் பழம்பதி போய்
எற்றுஞ் சிலையாற் பொருதழிப்ப
வல்லைக் குழைத்த முகிண் முலையார்
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே
மங்கைத் திருவேங் கடநாதா
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே (5)

வரையெறி யருவிக் குடமுழ வம்பணை
மத்தள மொத்ததிர
மடமயி னடமிட மழலைக் குழலிசை
வண்டுகள் பண்பாடத்
தரையெறி துளிமழை பொழியும் பருவந்
தண்புய னடவோகைத்
தழுவு பிரம்பென மின்னுக் கொடியுஞ்
சமதா ளத்தறையக்
கரையெறி கொன்றை யொழுங்குற நின்றலர்
கனகக் கொடியுதவக்
கமல மலர்ந்தது புவிமட மங்கை
தடக்கை மறிந்திலகும்
திரையெறி பொருநைத் திருநெடு மாலே
சிற்றில் சிதைக்கலையே
தென்மங் கைத்திரு வேங்கட நாதா
சிற்றில் சிதைக்கலையே. (6)

கம்பவ ளக்கட கரிமத் தகமுட்
கடைபழ வெள்வயிரக்
கனகக் கிம்புரி கட்டிய கோடு
கழித்துப் புடை யறையக்
கும்ப வளக்கடை வாய்த்தலை சரியும்
குருதி யிளம் பருதிக்
குணவள வியகதிர் பொருவரு மருவிக்
குமிழி யெழுந் தொழுகத்
தம்பவ ளக்கனி வாய்மணி முறுவற்
றரள நிலாத் (திகழுந்)
தண்மதி வதனத் தெந்தை பிரானே
தயிர்பா லமுது செயுஞ்
செம்பவ ளத்தில் லிதழ்மழ விடையே
சிற்றில் சிதையேலே
தென்மங் கைத்திரு வேங்கட நாதா
சிற்றில் சிதையேலே (7)

மூதர வணையணை யாடை யெனத்துணை
முளரிக் கண்வளரும்
முத்திக் கொருவித் தேயளி......
மோந்து கிடந்தறையத்
தாதவிழ் மடல்முகு ளத்தனை யளவிய
தண்டேன் வண்டலிடுக்
தாமப் பரிமள மருவிய திண்புய
சயிலத் தரியேறே
பூதல முழுவது மோரடி வைத்துப்
பூங்கம லத்தொருவன்
பொன்னு டளவு மளக்குந் தளிரடி
பொலிய வழங்கு நதிச்
சீதர! தெய்வ சிகாமணியே! என்
சிற்றில் சிதைக்கலையே
தென் மங்கைத்திரு வேங்கட நாதா
சிற்றில் சிதைக்கலையே. (8)

கருவாய்க் குருத்து வளர்ந் தருளுங்
காலந் தொடுத்து வரையறுத்துக்
கணித்துப் பெண்பா லெனப் பிறக்கிற்ற
கடிந்து விடுத்துப் பிறித்தாண்பால்
உருவாய்ப் பிறக்கிற் சுரிகை முக
முருவி யறுக்கப் புகு மிரவில்
உள்ளங் கலங்க நடுநடுங்கி
யுயிர்த்து நந்த கோபன்மனை
வெருவாக் கலந்து பிறந்த மக
வெங்கே யென்று வற்புறுத்த
வேற்றுக் குமரி யைக் கொணர
மீண்ட கஞ்சன் கருங்கண்ணன்
வருவாக் குணரா வடமதுரை
வாழ்வாய் சிற்றில் சிதையேலே
மங்கைத் திருவேங் கடநாதா
வளைக்குஞ் சிற்றில் சிதையேலே. (9)

பருவத் தழகிய கருமுகில் பொருவும் பாலா கோபாலா
பதின்மர்க்குளமுரு கத்திருமொழிபயில் பஞ்சாயுதவண்ணு
உருவத் தழகிய பதிஞ றுயிர மொடியிடை மடநல்லார்
உபய வளைக்கைக் குரவை மணக்கூத் தாடாடிய குழகா
மருவைத் தருவிய செண்பக நறுமலர் மாலைத் திருமார்பா
மகரக் குழையணி சிகரப் புயதர வாகா விரைகமழ்பூந்
திருவைத் தழுவு முராரிமுகுந்தா சிற்றில் சிதைக்கலையே
தென்மங் கைத்திரு வேங்கடநாதா சிற்றில்சிதைக்கலையே(10)

மூவாமுதலே முத்தொழி லுலகின் முடிக்குமுதற்பொருளே
முத்தர்க்குயிரே பத்தடியாருரை முத்தமிழணிகலமே
ஓவா தருள்புரி கருணைக்கடலே..........
ஓவியமூதணி யுயிர்பெற்றுள்ளமுவப்பத் தீங்குழல்வாய்
நாவாரமுதந் துளை......மூகி நறுஞ்சுவை மதுரமரு
நாதத்தியலிசை நாதபுராதன நந்தா கோவிந்தா
தேவாதியர்தொழு சூளாமணியே சிற்றில்சிதைக்கலையே
தென்மங்கைத்திரு வேங்கடநாதா சிற்றில்சிதைக்கலையே

**சிற்றில் முற்றும்**

## 9. சிறுபறைப்பருவம்

மைகுழைக் குங்கருங் கங்குற் பிழம்பைநிகர்
......மழைத்துருவு தொட்டால்
மழலையிசை வரிவண்டு களிகொண்டு மடல்வழி
மடுத்தறு பதங் குழைத்துக்
கைகுழைத் திறுகிய முறுக்காணி யிருதலைக்
கடைகுழைக் திசைநரப்புக்
கருவிமணி மகரயா ழிசையை குழைத்தூது
கமுகினம் பாளை வடிவம்
பைகுழைத் தடரும் படத்தலை யெடுத் தாடும்
பாம்பென்ன மணிமிடற்றிற்
பட்டங் குழைததமடல் வழிமுறுக் குடையப்
பசுந்துளி யசும்பொழுகு தேன்
செய்குழைத் தொழுகுதென் கிட்ணு புரத்தரசு
சிறுபறை முழுககியருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கியருளே. (1)

மகாத்திருவ நிதிகூவ நகர்தரு தம்பிச்சான்
மகிழ்ந்தகுல மதலை செங்கோல்
மயிலேறி மன்னன் பிரதிட்டை செய் வித்தருள
மணிமதிட் கோயில் புக்கான்
சகாத்தமோ ராயிரத் தொழுகுநா னூற்றுவிதி
தழுவுமெண்பத் தஞ்சின்மேற்
றருகொல்ல மெழுநூற்று முப்பதெட்டாமாண்டு
தந்தருதி ரோற் காரியிற்
பகாத்தரும் வைகாசி பதின்மூன்றி னுறுமமா
பக்கத் தினத் திறுகையிற்
பயில்மூல நாட்சிங்க லக்னத் துதிக்குமொரு
பஞ்சமா யோகத்தினிற்
சிக்கிர வடவேங் கடங்கிட்ணாகக ரென்றமால்
சிறுபறை முழக்கியருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கியருளே. (2)

வெங்கட் பணுமகுட மண்டலிக் குந்துத்தி
வெயில்மணிச் சூட்டு நீட்டு
விடவர வணைப்பள்ளி கொள்ளுமுழு மணிநீல
வேரித் துழாய்க் கொண்டலே
அங்கட் பழங்கங்கை யாற்றினுக் குந்திரை
யலைத்தெறியு முத்தவண்ட
லம்பாவை யைக்கிள்ளை மொழிமகளிர் பெண்பிள்ளை
யாமென்ன விளையாடு பூம்
பொங்கர்ப் புதுப்பூ நறுங்கொத் திறைக்கும்
புனற்றுறைக் குஞ்சங்கணிப்
பொருநைத் துறைக்குமிறை வன்குருகை வகுளமுனி
புனையுந் தமிழ்த் தலைவனே
திங்கட் பொருஞ்சங்கு சக்கரக் கடவுளே
சிறுபறை முழக்கியருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கியருளே. (3)

ஊனொழுக் கியகொழுங் குருதிபுல ராதவே
ழுறையொழுக் கியகடை விடுத்
தருவிக் கழித்தெறியு மசுரருர மிருபிள
வொழுக்கரு துதிர மொழுகி
கானொழுக் கியகலுழி வெள்ளப் பெரும்புனல்
கறைதுய் யறைத்த பசுமண்
கரையொழுக் கியதேன் வழுக்கப் பொருங்கொலைக்
களமொழுக் கலை யெழுந்து
மீனொழுக் கியமகர சலதியக டொழுகிவளை
வெண்டாள வண்ட லுட்போய்
விரவுஞ் சிவப்பொழுக் கித்தன் னிறம்பட
வெகுண்டு புனை வாகையம்பூந்
தேனொழுக் கியசக் கரப்படை தரித்தமுகில்
சிறுபறை முழக்கி யருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கி யருளே. (4)

பண்டுயிரு மண்டபகி ரண்டப் பரப்பும்
பரந்தபகு வாய்ந் தாழியிற்
பாற்குழம் புங்குழம் பாதுகொதி யாற்றியாய்
பாவைய ருறைத்த தயிருங்
கண்டுதொடு வுண்டசிறு பண்டிக்கு முழுதுங்
கனற்றிச் செறிப் பதற்குக்
கனலிற் கருக்கும் பசும்பிரைத் திருமுலைக்
காம்புபிதி ரோடு தீம்பால்
கொண்டுகுட வளைவயிற் றிற்கரைத் துண்ணெனக்
குமுதமணி வாய் நெளித்துக்
குழறப் புகட்டிக் கவுட்புடைத் தெறித்திணைக்
கோகனக விழி துயிற்றச்
செண்டுமொரு புடைவைத் திரண்டுவிழி துயிலுமுகில்
சிறுபறை முழக்கியருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கி யருளே. (5)

வண்டுமுகக்குங் குடமல்லிகைமலர் மாலை யொழுங்கசைய
வயிரமுகக்குங் கொண்டைசரிந்து மலர்க்குஞ் சியுமசைய
கண்டுமுகக்கும் பவளக்களிவாய்க் கடைவழி யமுதசையக்
கதிருதயம்பொரு வள்ளைக்குழையிற் கற்குண் டலமசையப்
பண்டுமுகக்குந் திருமறுமார்பிற் பயிலைம் படையசையப்
பால்வெண்டயிர்தொடு வுண்டளவுஞ்சிறு பண்டிகுழைந்தசையச்
செண்டு முகக்குங் குழமண மகவே சிறுபறை கொட்டுகவே
தென்மங்கைப்பதி வேங்கடவாணு சிறுபறை கொட்டுகவே. (6)

தகர மணக்கும் பருவக் குழலியர் தடமுலை மகுடத்திற்
றங்கள் குடங்கை தாமரை கொட்டத் தள்ளா டியுமுள்ளாய்
மகர மணக்குங் குழைதோய் கட்கடை மழைகொட் டக்குழறும்
மணிவாய்ப் புடையா வலமுங்கொட்ட வடிக்குந் திலகமுகம்
பகர மணக்கும் பங்கய மலரிற் பச்சுதி ரங்கொட்டப்
பாதம் பூதல மிடையே கொட்டப் பத்துத் தலையுடையோன்
சிகர மணக்கும் புயவலி கொட்டச் சிறுபறை கொட்டுகவே
தென்மங் கைத்திரு வேங்கட வாணு சிறுபறை கொட்டுகவே

பாலருச் சுவைபழகு பவளவாய்க் கிளிமொழிப்
பானலம் பூங் கொலைவிழிப்
பணையருத் துணைமுலைப் பிடிநடைக் கொடியிடைப்
பங்கே ருகத் திருமுகச்
சூலருப் பருவக் கரும்புயற் கொந்தளச்
சூளியக் கொண்டை சூளிரச்
சூட்டிக் கழிக்குங் குறுங்தோட்டு மல்லிகைத்
தொடையலடை யத்தொகுக் குங்
கோலருக் கனகப் பசுந்தகடு படுமணி
குயிற்றுஞ் சுடர்த் தொடிக்கை
கோதைமண முபயபுய பூதரத் தொழுகக்
குணங்கொடு மணங் கவர்க்கும்
சேலருப் பழனத் தமிழ்க் கிட்ணை நகராசு
சிறுபறை முழக்கி யருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கி யருளே. (8)

சந்தா டவிசூழ் பொதியக் குறுமுனி தந்த துறைப்பாகத்
தமிழுந் தமிழைத் தழுவிய வண்ணத் தண்ணந் தென்றலுமாய்க்
கொந்தார் பொருநைப் பரிமள மளவுங் குமிழியெழுந் தெறிநீர்க்
குனிதிரை சிதறுந் தாள முயிர்ப்பக் கோகன கம்புளப்
பந்தா யிளகும் புளகக் களபப் பாவையர் வதனம் போற்
பங்கய மலரச் செங்கய லுகளும் பழனத் திருநாடா
சிந்தா மணியே என்கண் மணியே சிறுபறை கொட்டுகவே
தென்மங் கைத்திரு வேங்கட வாணா சிறுபறை கொட்டுகவே
ஊனே யூனுக் குடலே யுடலி லுயிர்க்குந் தனியுயிரே
உயிருக் கறிவே யறிவின் பயனே யுணரும் பயனிலையே
வானே சுடரே மதியே மதியுடை மறையே மறைமுதலே
மருவே மருவின் பரிமளமேயென் மனமே மனநினைவே
கானே மலையே கடலே கடல்சூழ் கரையுல கம்பரவும்
காவல் விளக்கே கங்குற் பொழுதே களிதரு நண்பகலே
தேனே சுவையே வடிதெள் ளமுதே சிறுபறை கொட்டுகவே
தென்மங் கைத்திரு வேங்கட வாணா சிறுபறை கொட்டுகவே
[1] அஞ்சுருவு மழலைவரி வண்டுழுது கிளைகொண்
டடுக்குமல் லிகையல்லி வாய்
ஆறுகால் மடைவழி குடைந்தடை கிடந்துகறை
யாறுகா லருவி பாய
மஞ்சுருவு பச்சிளங் கமுகின் குருத்துருவி
வடிசுட ரயிற் படையெனா
மதிமண் டபத்துதையப் புறம்பட் டுருவ
வழியு மமு தூற்றிருந்து
கொஞ்சுகிளி மொழிமகளிர் கிஞ்சுக மடற்கடை
குழைந்துமது ரிப்ப வெள்ளிக்
குழிவுபடு வள்ளத்தி லொருவழி முகந்துறுகர்
கூடல்வா யரமி யத்திற்
செஞ்சுருதி யாடத் திருக்கைத் தலங்கொண்டு
சிறுபறை முழக்கி யருளே
தென்மங்கை யோங்குமலர் மேல்மங்கை வேங்கடவ
சிறுபறை முழக்கி யருளே. (11)

சிறுபறை முற்றும்

---

1 பிரதி அஞ்சுரு

## 10. சிறுதேர்ப் பருவம்

பார்முகட் டுழுதகிழி யுக்திகிரி முழுவதும்
பதுமரா கத்துடக்கிப்
பவளக் கொழும்பச் சுறுத்தித் தகடு
பட்ட பச்சைப் பசும் பொன்
ஏர்முகத் தொழுகுமணி மரகதப் பாரடை
யிணக்கிப் பரப்புநிலமட்
டிந்த்ரநீ லத்திழைத் துப்பழைய வயிரத்
திரட்டித் தலைக் குவித்துக்
கார்முகத் தகடுதட வும்புட்ப ராகங்
கனிந்தகூ விர மியற்றிக்
கனகாம் பரக்கன்ன கூடங் குயிற்றிமென்
கரியசூ ரிய படத்தாற்
சீர்முகத் தொழுகுவயி டூரியக் கிடுகுதேர்
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (1)

காரறுத் துக்ககன நெடுவெளி முகட்டுச்சி
கைக்கொண்ட மண்டலச் செங்
கதிர்வெயிலை யள்ளிக் கவர்ந்துண் டுபகி
ரண்டமொன் பது நெருக்குந்
தாரறுத் துக்கட முடைத்தொழுகு கரடத்
தடஞ்சிகர வரை யறுத்துச்
சதிபழகு குரதுரக ராசியை யறுத்துத்
தழங்குபணை யறை யொட்டகத்
தூரறுத் துத்தொடுத் தருகடை குழைத்துத்
துடித்தபுய வயவர் செங்கைத்
துங்கக் கொடுஞ்சிலை யறுத்துவெம் பாரதத்
துரியோ தனன் கடாவும்
தேரறுத் துப்பொருத விசயனிர தப்பாக
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (2)

மலையுருக் கொண்டெழு துணைப்புயத் திந்திரன்
மணிச்செழுஞ் சூட்டு வளைவாய்
வள்ளுகிர்ப் புள்ளிபறி யுஞ்சிறக டிக்கொண்டு
வாரணங் கூக்குர லிடக்
கலையுருக் கொண்டெழு கருங்கங்குல் புலர்கின்ற
காலையென் றறி வின்மையிற்
கங்கைப் பழம்புனல் வழங்கநீ ராடக்
கனங்குழை யெழாமுன்னமே
முலையுருக் கொண்டெழு புணர்ச்சிநிக ழக்கடவுண்
முனிவன் கருத் துணர்ந்து
முனிவுதணி யாதுவிழி கதழெரி கொதித்தழன்
மொழியி னடு சாபமிட்ட
சிலையுருக் கொண்டெழ வருங்கிரண சரணமுகில்
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (3)

ஒழுங்கை க்குறித்தொருவ ரேட்டிலெழு தாக்கிளவி
யூட்டியெழு தியகருத் தின்
உயர்வுண்ண மயர்வறு மனத்தனேன் மகமுடித்
தொழுகும்ப விரத நன்னீர்
தொழுங்கைத் தலங்குவித் தஞ்சலித் தாடுமுன்
சுருதியுப நிடத வேதச்
சுடர்வடி வெடுக்கும் பரஞ்சுடர் வரஞ்சூடுந்
தொடுகடற் புடை வடவையிற்
புழுங்கைக் குவந்தகுறள் வடிவைக் குறிக்கப்
புலப்படா தொருமூ வடிப்
புடவியை யெமக்குதவு முதகப் புதுப்புனல்
புரிந்தளிப் பாயென்ன முன்
செழுங்கைக் கொழுங்கமல மலரவு மிரந்தமுகில்
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (4)

குரமுருட் டிக்குர கதக்குழாத் துடலைக்
கொழுங் குருதி கொப்பளிக்குங்
குடரைகரி யுங்கழுகு மொருவழி பிடுங்கக்
கொலைக்களத் திடை யுருட்டித்

தரமுருட் டிச்சதங் கைத்தண்டை பரிபடுந்
தாருருட் டித் தோளிணைச்
சயிலத்தை வெட்டித் துணித்துருட் டிப்பரித்
தலைவர்தலை யற வுருட்டிப்

புரமுருட் டிக்கவச மிருகடைப் பூட்டிய
பூட்டுவா ய றவுருட்டிப்
பொழியுங் கடாக்கலுழி வாரணம் பொரவிட்ட
போர்வலி யிலங்கை வேந்தன்

சிரமுருட் டிச்சிலைத் தொழில்விசய மருவுமுகில்
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (5)

தாற்றாடு மலை வாழை மணிமிடறு விம்மிச்
சரிந்திலைத் தலைப் பழுத்துத்
தரைதடவு மிடைபழக் குலைவழி மலைத்துகுடை
தாவுங் கவிக் குழாந்தேன்

ஊற்றாடு கடைவாய் மடுத்துறிஞ் சிப்பொருப்
புழையூடு கற்சிறை நடந்
தொழுகிய குறிஞ்சியந் தேன்குடித் துக்கவலை
யூடுபோய் மலைவ ருக்கைத்

தூற்றாடு வேர்விழு தெறிந்து மண்கண்டந்
துளைத்துக் குடக் கனிக்குட்
சுளையைக் கிழித்தெடுத் துத்தின்று தேக்கிடச்
சுளைபறித் தோடு பொருநைச்

சேற்றாடு சங்கின முழங்குந் தடந்துறைவ
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (6)

வம்பா தரித்துப் புடைத்துப் பணைத்திறுகி
வட்டமிட் டிடைநெருங்கி
வழிக்கின்ற பச்சைப் பசும்புழுகு குங்கும
மணப்பக் குழைத்த கொங்கைக்

கொம்பா யுருக்கொண்ட வடிவழகு பரிமளங்
கொள்ள வள்ளிப் புலர்த்திக்
கொந்தளக பந்தியை வகிர்ந்துகுட மல்லிகைக்
கோதைசூட் டியகோமளத்

தம்பா னலைப்பய முறுத்தியொரு தாளினன்
றலையவு கிறுத்தித் துளித்
தழுதகண் ணுங்கண்ண நீரரு தலைவித்
தடுங்கலக விழி யுமைக்குஞ்

செம்பாதி யங்கமுங் காணிதக் தோன்றுழச்
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (7)

பண்பகுத் தழிதருங் கொள்ளையம் பிள்ளையறு
பதமழலை பழகு குழல்வாய்ப்
படலையிள வரிவண்டு கிண்டிமக ரந்தம்
படிந்தடை கிடந்து மடல்வாய்க்

கண்பகுத் தொழுகுநறை கக்குந் தகட்டிதழ்க்
கடைவா யுடைத் தொழுகுபூங்
கமலமுங் குவளையுங் குமுதமுந் திருமுகங்
கண்மலர்ச் செம்பவள வாய்த்

தண்பகுத் தறியாத தமனிய விதானத்
தலைப்புறந் தூங்க நீங்காத்
தடம்பருதி மருமத் திடங்கொளலர் மேன்மங்கை
தன்னிறச் சுவடு காட்டுஞ்

சென்பகத் தொடையலணி திண்புயக் குழகனே
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே. (8)

வேதாரா கத்தொழுகு மதுராமு றியபழைய
　　வேதாந்த வித்தை யுணர்வோர்
விளங்குதிரு வுள்ளத் தலைப்புறந் தூண்டா
　　விளக்கமே வேள்வி வடிவே
நாதரா மக்கிரி வசந்தன்மல் லாரிகவில்
　　நாட்டைபாட் டளி யிழற்ற
நறைகொப் புளிக்கும் பசுந்துழாய்க் கண்ணிமண
　　நாறுபூங் கரு மேகமே
மாதரா ரெண்ணிரண் டாயிரம் பெயரொடு
　　வளைக்கரங் கோத் தொழுகியே
மண்டல மிருந்துபகி ரண்டமுக் தமிதமி
　　மயங்குரா வைக்கூத் தனே
சீதரா மாதவர பரவாசு தேவனே
　　சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
　　சிறுதே ருருட்டி யருளே. (9)

நீபத் தொண்டைக்கட வுளைப்பெற்ற சடைமுடி
　　நிலாக்குழவி யமுதூறல் போல்
நிலவொழுகு தவளவெண் ணீறெழுது வடிவுதழல்
　　நீறுற் றது கடுக்கும்
கோபத் துருக்குமொரு கண்ணுதற் பவளக்
　　குடங்கையி லடங்கிய முடைக்
கோதறு மறைக்கிழவ னழகிய கபாலநிலை
　　கொண்டுபகி ரண்ட முழுதும்
தாபத் துழன்றுசென் றெந்தையே முந்தையே
　　தண்டுழாய் மலர்க் கொண்டலே
தவிரவருள் புரிகெனத் தொலையாத பரிவத்
　　தன்னைத் தொலைத்த ஞானத்
தீபக் கொழுந்தெனு முதற்குணப் படிவமே
　　சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
　　சிறுதே ருருட்டி யருளே. (10)

கார்வாழ்க கருணைமுகி லரியகயி ஞன்வாழ்க
காவியக் தொடை மருகனும்
கற்பக நிகர்க்குமயி லேறிமா நதன்வாழ்க
கங்கா குலோத் துங்கவேள்
ஏர்வாழ்க தம்பிச்சபூபாலன் மரபோங்கி
யினிதூழி வாழ்க கோயில்
எம்பிரான் ருனசமை யத்தவர்கள் வேதிய
இராமா நுசையன் வாழ்க
பார்வாழ்க பயிலனைத் துக்கொத்து மனுமுறை
பரிந்தசெங் கோலும் வாழ்க
பச்சைமுகில் கச்சிவரு விசுவநா தனகிளை
படித்தலை தழைந்து வாழ்க
சீர்வாழ்க வாழ்கவலர் மேல்மங்கை கொண்கனே
சிறுதே ருருட்டி யருளே
செங்குவளை மலர்பழன மங்கைநகர் வேங்கடவ
சிறுதே ருருட்டி யருளே (11)

**சிறுதேர் முற்றும்.**



### கிருஷ்ணபுரம்

## சுவாமி திருவேங்கடமுடையான் பிள்ளைத் திருநாமம்

### முதற்சொல் குறிப்பு அகராதி

# Copy of The Proceedings of The Director of Public Instruction Madras.

**Dis. No. 2711/54 dated 13—5—'54**

**Sub:** Books and Publications-3 volumes of Kambaramayanam and 2 other books on Nammalwar by Perian V. N. Srinivasa Iyengar of Alwartirunagari Tirunelveli District–brought to notice.

The books mentioned below and Reccommended for use in the libraries attached to schools, Colleges and in Public libraries.

3 Volumes of Kambaramayanam (Nos. 357, 358 & 353)

| | |
|---|---|
| Bala Ayodhya Aranya Kandangal | Rs. 8—0—0 |
| Krishkinda Sundara Kandangal | Rs. 6—0—0 |
| Yudha Kandam | Rs. 10—0—0 |

Nammalwar 2 volumes of Thirugnana Mudirai Kovai (Nos. 360 & 361)

| | |
|---|---|
| Nammalwar Thalattu & 5 others | Rs. 5—0—0 |
| Nammalwar Pillaithamil & 3 others | Rs. 3—8—0 |

By Perian V. N. Srinivas Iyengar
Coyies can be had from Perian V. N. Srinivasan,
Alwartirunagari, Tirunelveli Dt.

**K. R. MANICKAM,**
For Director of Public Instruction.

Copy Forwarded to:-

**The Divisional Inspectors, D. E. O's and Inspectors of School.**

# ஆழ்வார்திருநகரி சுவடிப் பிரதிகளினின்று பதிப்பித்தவை.

திருஞானமுத்திரைக் கோவை

| | | ரூ. அ. |
|---|---|---|
| 1 | "நமமாழ்வார் நூற்றெட்டுத்திருப்பதி தாலாட்டு" உபயகவி அப்பா இயற்றியது | 0—6 |
| 2 | "ஸ்ரீ சடகோபன் சந்திரகலாமாலே" அனந்துவையங்கார் இயற்றியது | 0—1 |
| 3 | "ஸ்ரீ சடகோபன் திவ்யசரித்திரம்" தேவராஜ பாரதிகள் இயற்றியது B. A. வகுப்புக்கு பாடமாக இருந்தது. | 2—0 |
| 4 | "திவ்யப்பந்த் பாசுரப்படி இராமாயணம்" | |
| 5 | "துலேவில்லி மங்கலம் தேவர் பிரபன் பேரில் சந்திரகலா மாலே" தேவராஜ பாரதிகள் இயற்றியது. | 0—1 |
| 6 | நம்மாழ்வார் பிள்ளேத்தமிழ, வாணிதாஸன் முன்னுரையுடன் | 1—0 |
| 7 | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம் | 0—4 |
| 8 | "குருகூர்ப்பள்ளு" சடகோபப் புலவர் இயற்றியது ராவ்சாகிப் S. வையாபுரிப்பிள்ளே அவர்கள் சோதித்து எழுதிய முகவுரையுடன். | 0—6 |
| 9 | "முதலாழ்வார்கள் வைபவம்" வடிவழகியநம்பி தாஸரால் | 0—6 |
| 10 | தெந்திருப்பேரை திருக்கோளூர் திருப்பணிமாலே S. வையாபுரிப்பிள்ளே அவர்கள் சோதித்தது. | |
| 11 | திருவைகுந்தநாதன் பிள்ளேத்தமிழ் ராவ்சாகிப் மு. இராகவையங்கார் சோதித்து எழுதியமுகவுரையுடன் | 0—1 |
| 12 | கம்பராமாயணம் பாலகண்டம் முதல் எழு படலங்கள், பல புதிய பாடாந்தரங்கள் கவிகளுடன் S. வையாபுரிப் பிள்ளே. P. N. அப்புஸ்வாமி அய்யர் சேர்த்தது. | 0-10 |
| 13 | தெய்வச்சிலேயார் விறலிவிடுதூது, கற்பணிகளில் சிறந்த கிருஷ்ணபுரத்தை பற்றியது. பழைய தாமிரசாஸநத்துடன். | 0-10 |

| | | |
|---|---|---|
| 14 | கம்பராமாயணம், பாலகாண்டம் ராவ்சாஹிப் மு. இராகவையங்கார் பரிசோதித்தது. | 2—0 |
| 15 | ஷை திரு. அயோத்தியா காண்டம் A. N. மகர பூஷணமையங்கார் B.A B.L.. N. K. பக்ஷிராஜை யங்கார் B.A.B.L., பரிசோதித்தது. | 2—4 |
| 16 | ஷை ஆரண்யகாண்டம் N. K. பக்ஷிராஜையங்கார் B.A.,B.L., பரிசோதித்தது. S. வையாபுரிப் பிள்ளை B.A.,B.L., முன்னுரையுடன் | 2—4 |
| 17 | ஸ்ரீ பாராங்குச நாடகம் சேஷகவி இயற்றியது செந்தமிழ் பத்திரிகாசிரியர் திருநாராயணையங்கார் முன்னுரையுடன் | 1—0 |
| 18 | கம்பராமாயணம் கிட்கிந்தா காண்டம் N. K. பக்ஷிராஜையங்கார் B.A.,B.L., பரிசோதித்தது. | 2—8 |
| 19 | நவதிருப்பதி மகாத்மியம். குருகூர், திருப்புளிங்குடி. துலைவில்லிமங்கலம் தலமான்மியங்கள். | 0—8 |
| 20 | கம்பராமாயணம் சுந்தரகாண்டம் N.K. பக்ஷிராஜை யங்கார் B.A.,B.L., சோதித்தது. | 2—8 |
| 21 | திருக்குருகூர் திருப்பணிமாலை (ஆழ்வார்திருநகரி ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நதித் திருப்பணிகள் | (அச்சில்) |
| 22 | கம்ப ராமாயணம் யுத்த காண்டம் N.K. பக்ஷிராஜையங்கார் B.A.B.L. பரிசோதித்தது | 10—0 |
| 23 | ஷை உத்தரகாண்டம் ஷையார் சோதித்தது | (அச்சில்) |
| 24 | குருகைமாலை குருகாக்ஷேத்திரமாகிய ஆழ்வார்திருநகரி பற்றிய சிறப்புக்கள் கூறுவன வித்வான் T. K. இராமாநுஜையங்கார் சோதித்து எழுதிய அரும்பதம், குறிப்பு, விசேஷ உரைகளடங்கியது. குருகூர் இராமரத்ன கவிராயர் இயற்றியது. | 1—8 |
| 25. | கிருஷ்ணபுரம் சுவாமி திருவேங்கடமுடையான் பிள்ளைத்திருநாமம் திரு. கி. இராமாநுஜையங்கார் பரிசோதித்தது. | 1—8 |


**பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்**

பதிப்பாசிரியர்

**திருஞானமுத்திரைப் பிரசுராலயம்,**

ஆழ்வார்திருநகரி.

COPY OF THE PROCEEDINGS OF THE COMMISSIONER H. R. & E. C. E. (Adm) DEPARTMENT MADRAS-2.

No. L. Dis. 28933/54 Dated 8—10—54.

Sub:- Worke from orginal manuscrips-encourgement of.

Ref:- From Perian V. N. Srinivasan. Alwartirunagari Tinnevelly Dt. letter Nil.

Sri V. N. Perian Srinivasan residing at Alwartirunagari Tinnevelly Dt, has published (1) Kambaramayanam Kandam 1-6 (2) Six works of Nammalwar & (3) others four prabandhams on Nammalwar. These publications are of great value and edited after consulting valuable and old manuscripts treasured at Alwartirunagari. The trustees of religious institutions having libraries are advised to prchase these books for maintenance in the Devasthanam libraries,

(Sd.) **S. V. RAJAM,**
**For. Commissioner,**
8—10—54.

To.

All Religious institutions having libraries as per list. 2. All A. C's and Dy Cs 3. Perian V. N. Srinivasan Avl.